அம்புலிமாமா
சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 அக்டோபர் : 2003 புன்னகை : 8


மர்மக்குளம்
13


நவீன வேதாளக் கதை
19


இந்தியப் புராதனக் கதைகள்
26


விநாயகர்
45



## பொருளடக்கம்



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/-
இந்தியாவிற்குள் ரூ.120/-
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
**சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# விரைவு உணவால் விரைவில் சரிவு

நம் வாழ்வு நன்கு இருக்கப் பல வழிகளும் முறைகளும் இருந்து போதிய நேரமும் கிடைக்கும் நிலையில் இருக்கையில் நாம் அவசர அவசரமாகச் செயல்படுவது ஏனோ? தொலைபேசிகள், நடமாடும் தொலைபேசிகள், ஃபேக்ஸ், ஈ-மெயில் என்ற சாதனங்கள் நம் வேலைகளை விரைவில் முடித்துக் கொடுத்து நாம் சாவகாசமாக இருக்க நேரமும் அளிக்கின்றன.

இப்போது விரைவு உணவுப் பழக்கம் நேரத்தை மிச்சப்படுத்துவதாகக் கூறி நம்மில் புகுந்துள்ளது. இது நம் வாழ்நாளைக் குறைத்துவிடும் போலிருக்கிறது. நம் உடல்நலனையும் பாதிக்கிறது. மேற்கத்திய நாடுகளிலிருந்து நமக்கு வந்த இந்தப் பழக்கம் எதிர்பாராத பிரச்சினையை உருவாக்கியுள்ளது. அமெரிக்காவில் சான்பிரான்சிஸ்கோ உணவு, சமுதாயக் கொள்கைப் பேராசிரியர் மிச்செல்மஸ்கரன்ஹாஸ் இவ்வாறு கூறுகிறார், ''அமெரிக்க உணவின் ஒரு பகுதியாக இறைச்சி, மேற்கத்திய விரைவு உணவு, குறிப்பிட்ட லேபல் கொண்ட பானங்கள் இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இதனால் அங்கு மக்கள் ஆரோக்கியம் பாதிக்கப்படுகிறது. இந்தியா கோடிக்கணக்கானவரின் பசியைப் போக்குமா அல்லது ஒரு சிலரை மட்டும் கொழுக்க வைக்குமா? இந்தியாவின் பல்வேறு பண்பாடுகள் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டு அந்நாட்டில் பல ஆரோக்கியமான உணவுகளை உள்ளூரில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு தயாரிப்பதில் வல்லதுதான்.''

இந்தப் பழக்கத்திற்கு முதலில் அடிமைகளாகிறவர்கள் குழந்தைகள். பெற்றோர்கள் மிக விழிப்புடன் இருந்து தம் குழந்தைகளுக்கு இதனால் ஏற்படப் போகும் சரிவைத் தடுத்து எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

ஆசிரியர் : **விஸ்வம்**

Visit us at : http://www.chandamama.org






# பெட்ரோல் சேமிப்பு



தொலைபேசிக் கட்டணம் செலுத்த இன்னும் நானேகே நாள்தான் இருக்கிறது," என்றார் வீணாவின் அம்மா.

அப்பா சற்று யோசித்துவிட்டுச் சொன்னார். "நாளை மாலை எனக்கு வேலை ஒன்றும் இல்லை. சலவைக் கடைக்குப் போய் என் துணிகளைத் திரும்பி வாங்கி வரலாம் என்று இருந்தேன். தொலைபேசி அலுவகம் அதற்குப் பக்கத்தில்தானே இருக்கிறது? கட்டணத்தையும் அங்கே சென்று கட்டிவிடுகிறேன். உனக்கு அந்தப் பக்கம் ஏதேனும் வேலை இருந்தால் நீயும் என்னுடன் வந்துவிடு."

"நானும் அங்கே உள்ள பேரங்காடியில் அடுத்த மாதச் சமையலுக்கான பொருள்களை வாங்க வேண்டும். அப்படியே பழுது பார்க்கக் கொடுத்திருக்கும் டோஸ்ட்டரையும் வாங்கிக் கொள்ளலாம். செப்பனீட்டு மையம் பேரங்காடிக்கு அடுத்த கடைதான்," என்றார் அம்மா.

அடுத்த நாள் அப்பாவும் அம்மாவும் வீணாவையும் அழைத்துக் கொண்டு காரில் சென்றார்கள். கொஞ்ச தூரம் சென்ற பிறகு சிறுவர் நூலகம் வந்தது. அதைப் பார்த்த வீணா, "அப்பா, என்னுடைய நூலகப் புத்தகங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். அப்பா, அப்பா... கொஞ்சம் வீட்டிற்குத் திரும்பிப் போங்களேன். என் புத்தகங்களை எடுத்துக் கொள்கிறேன். அதற்கு அதிக நேரம் பிடிக்காது," என்றாள்.

அப்பா வீணாவைப் பார்த்தார். "வீணா, இப்படித் திட்டமிட்டுக் கொள்ளாமல் அங்குமிங்கும் காரை ஓட்டினால் அரிய எரிபொருள் வீணாகிவிடும். அப்படி வீணாகாமல் இருப்பதற்காகத்தான் நானும் அம்மாவும் இந்தப் பக்கத் தில் இருக்கும் வேலையை எல்லாம் ஒழுங்காகத் திட்டமிட்டுக் கொண்டு புறப்பட்டோம். ஒரே பாதையில் இரண்டு முறை வருவதைத் தவிர்க்கலாம் அல்லவா? இப்போது இரண்டே இரண்டு புத்தகத்திற்காக வீடு வரை போய்த் திரும்ப வேண்டுமென்றால் இவ்வளவு கவனமாகத் திட்டமிட்டதற்கான பலன் எல்லாம் பாழாவிடுமே?" என்றார் கண்டிப்புடன்.

ஒரு நிமிடம் கழித்து அவரே சொன்னார். "அடுத்த வாரம் எனக்கு இங்கே கொஞ்சம் வேலை இருக்கிறது. அப்போது உன்னை நூலகத்திற்கு அழைத்துச் செல்கிறேன்."

அவர் சொல்வது சரிதான் என்று வீணாவுக்குப் புரிந்தது. இன்று அவள் புதிதாக ஒரு பாடம் கற்றுக் கொண்டாள்.

# கேட்டதற்கே பதில்!

**மா**ளவ நாட்டு மன்னனின் குதிரைப் படைத் தலைவன் வீரசேனன். அவனது திறமையையும் சக்தியையும் நினைத்து அண்டை நாட்டு மன்னர்கள் மாளவத்தின் மீது தாக்குதல் நடத்த பயப்பட்டார்கள். பல ஆண்டுகள் பணியாற்றிய வீரசேனனுக்கும் வயது அறுபதைத் தாண்டிவிட்டது.

அவன் அப்போது மன்னனிடம் ''நான் இனி ஓய்வு எடுத்துக் கொள்ள விரும்புகிறேன். எனவே என்னைப் பணியிருந்து விலகிக் கொள்ள அனுமதிக்க வேண்டுகிறேன்,'' என்றான்.

அதுகேட்டு மன்னனும் ''சரி. உமக்குப் பிறகு குதிரைப் படைத் தலைவனாக சமரசேனனை நியமிக்கலாம் என் எண்ணுகிறேன். அவனைப் பற்றிய உமது அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டான்.

வீரசேனனும் ''உங்களது முடிவு சரியே. சமரசேனன் இப்பதவியைப் பெற எல்லா விதத்திலும் தகுதி பெற்றவனே!'' என்றான். அப்போது பக்கத்தில் இருந்த முதலமைச்சர் ''ஆனால் அவனுக்கு உன் மீது நல்ல அபிப்பிராயம் இல்லையே!'' என்று கூறினார்.

வீரசேனனும் முதலமைச்சரைப் பார்த்துப் புன்னகை புரிந்தவாறே ''மன்னிக்க வேண்டும். மன்னர் என்னிடம் கேட்டது சமரசேனனைப் பற்றி மட்டுமே. என்னைப் பற்றி அவன் என்ன நினைக்கிறான் என்று கேட்க வில்லையே!'' என்றான்.





# மணமகள் அவளே!

**பா**லூரிலிருந்த பாலுசாமி ஜமீன் தாரர் கொடுத்த வேலையை ஏற்று ராமநாதபுரத்திற்குக் குடும்பத்தைக் கூட்டிக் கொண்டு போய்க் குடித் தனம் செய்யலானான். அவனது இரு மகள்களும், மகன் மணியனும் விவாக வயதை அடைந்துவிட்டார் கள். மணியன் தன் தந்தையைப் போலவே சகல சாஸ்திரங்களையும் கற்று மாபெரும் பண்டிதனாக விளங்கியதால் அவனைத் தம் மாப்பிள்ளையாக்கிக் கொள்ள பலர் முன்வந்தார்கள்.

ஒருநாள் மணியனின் தாயார் அவனிடம் "மகனே! உனக்குத் தம் பெண்ணைக் கொடுக்க பலர் வந்து கொண்டிருப்பதை நீயும் கவனித் திருப்பாய். இனி உன் திருமணத் தைத் தள்ளிப் போடக் கூடாது. மேலும் ஒரு முக்கியமான விஷ யத்தை உன்னிடம் சொல்ல வேண் டும்," என்றாள். அதைக் கேட்ட மணியன் "அப்படி என்ன முக்கிய விஷயம் அம்மா?" என்று கேட்டான்.

அவளும், "நீ குழந்தையாக இருக்கும்போது நாங்கள் பாலூரில் இருந்தோம். அப்போது அடுத்த வீட்டில் அண்ணாசாமி என்பவர் இருந்தார். அவருக்கு ஐந்து பெண்கள். ஏழையான அவர் குடும்பத்தை நடத்த மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந் தார். அவருக்கு அவ்வப்போது எங் களால் ஆன உதவி செய்து வந்தோம். அவரது மூன்றாவது மகள் மாலதி. அவள் அப்போது உன்னைவிட மூன்று வயது சிறியவள். கெட்டிக் காரி. சுறுசுறுப்பானவள். அழகான வள். அவளை என் மருமகளாக்கிக் கொள்வதாக அண்ணாசாமிக்கும் அவ ரது மனைவிக்கும் நான் வாக்குக் கொடுத்தேன். உன் தந்தையும் என் அபிப்பிராயப்படியே செய்யலாம் என்று கூறினார். அதனால் உனக்கு திருமணம் செய்ய எண்ணுகையில்

- சிவனார் செல்வன் -



நான் கொடுத்த வாக்கு நினைவிற்கு வந்தது. அதனால் நீ வேறு பெண்களைப் பார்ப்பதற்குமுன் பாலூருக்குப் போய் அண்ணாசாமியின் மகள் மாலதியைப் பார்த்துவிட்டு உன் விருப்பத்தைத் தெரிவி!'' என்றாள்.

அதுகேட்ட மணியன் திகைத்து பதில் எதுவும் கூறாமல் இருக்கவே, அவனது தாயாரும் ''ஏன் பேசாமல் இருக்கிறாய்?'' என்று கேட்டாள்.

மணியனும் ''அம்மா! நம் குடும்பம் நன்கு படித்த குடும்பம். அதனால் இந்த வீட்டிற்கு நன்கு படித்தவளே மருமகளாக இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ராமநாத பண்டிதர் தம் மகள் வீணாவை எனக்குக் கல்யாணம் செய்து வைக்க என் அபிப்பிராயத்தைக் கேட்கவே, அதற்கு நான் சம்மதித்தேன். அவர் அடுத்த வாரம் இங்கு வந்து உங்களிடம் பேசுவதாகச் சொன்னார்,'' என்றான்.

மணியனின் தாயார் அவன் மனம் என்ன எண்ணுகிறது என்பதைப் புரிந்து கொண்டாள். ராமநாத பண்டிதர் சமஸ்தான வித்வான். அவர் தம் மகளுக்கும் எல்லா சாஸ்திரங்களையும் கற்பித்திருந்தார். தலைநகருக்கு ஒரு போட்டியில் கலந்துகொள்ள மணியன் சென்றபோது அப்போட்டிக்கு வந்த மற்றவர்களை எல்லாம் தோற்கடித்தபோதிலும் அவள் மணியனிடம் தோற்றுப் போனாள். அதனால் ராமநாத பண்டிதருக்கு மணியனை மிகவும் பிடித்துவிட்டது.

இதை மணியன் தன் தாயாரிடம் விவரமாகக் கூறி ''அம்மா! நீ சொல்வதைக் கொண்டு பார்த்தால் அந்த அண்ணாசாமி ஏழை என்றும் அவரது மகள் மாலதியை அதிகம் படிக்க வைத்திருக்க மாட்டார் என்றும் தெரிகிறது. எனவே வீணாவை நீ உன் மருமகளாக ஏற்றுக் கொள்ளலாமே!'' என்றான்.

அவனது தாயார் ''ஓ! விஷயம் இவ்வளவு தூரத்திற்கு வந்துவிட்டதா?'' எனவே, மணியனும் ''அம்மா! இதுபற்றி உங்களிடம் தக்க சமயத்தில் கூறலாம் என்று இருந்தேன். நீங்கள் என் திருமணப் பேச்சை எடுத்ததும் இதைக் கூறிவிட்டேன்,'' என்றான்.

அதைக் கேட்டு அவனது தாயார் ''சரி, யார் யாருக்கு எப்படி நடக்க வேண்டும் என்று விதி இருக்கிறதோ

அப்படித்தானே நடக்கும். எல்லாமே நாம் நினைத்தபடியே நடந்து விடுமா?'' என்று சற்று மனத்தாங் கலுடன் கூறினாள்.

அதுகண்டு மணியன் ''அம்மா! நீங்கள் வாக்குக் கொடுத்தபடி நான் ராமநாத பண்டிதருக்கு வாக்கு எதுவும் கொடுக்கவில்லை. நான் வீணாவை மணக்க என் இசைவைத் தான் தெரிவித்தேன். எனக்கும் வீணாவிற்கும் திருமணம் என்று நிச்சயமாகிவிடவில்லை. எனவே நீங்கள் விரும்பியபடி நடக்கிறேன். நான் உன்னையும், தந்தையையும் கூட்டிக் கொண்டு பாலூர் போய் மாலதியைப் பார்க்கிறேன். சரி தானே!'' என்றான்.



மறுநாளே மூவரும் பாலூருக்குப் போய் அண்ணாசாமியின் வீட்டை அடைந்தார்கள். அவர்கள் வந்தது கண்டு அண்ணாசாமி ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தான். வந்தவர் களை வரவேற்று உபசரித்தான்.

பாலுசாமியும் ''அண்ணாசாமி! நாங்கள் இங்கே இருந்தபோது என் மகனுக்கு உன் மூன்றாவது மகள் மாலதியைத் திருமணம் செய்து வைத்து எங்கள் மருமகளாக்கிக் கொள்வதாக வாக்குத் தந்தோம். இவன் என் மகன் மணியன். இவனும் எங்களோடு சேர்ந்து பெண் பார்க்க வந்திருக்கிறான். எல்லோரும் திருப்தி அடைந்துவிட்டால் இவர் களது திருமணத்தை நடத்தி வைத்து விடலாம்,'' என்றான்.

அண்ணாசாமி ''அடடா! இதற்கு நான் கொடுத்து வைக்கவில்லை. நீங்கள் அன்று கொடுத்த வாக்கை மறக்காமல் வந்து பெண் கேட் கிறீர்கள். ஆனால் மாலதி இப்போது எங்கள் வீட்டில் இல்லை. சமஸ்தான பண்டிதர் ராமநாதர் இவ்வூருக்கு வந்தபோது மாலதியைப் பார்த்து அவளை சுவீகாரம் எடுத்துக் கொள்வதாகக் கூறினார். அவருக்குக் குழந்தையே இல்லையாம். நானும் என் நிலையை எண்ணி அவளை அவரிடம் கொடுத்துவிட்டேன். இப்போது என் மகள் தலைநகரில் அந்தப் பண்டிதர் வீட்டில் தான் வளர்ந்து வருகிறாள்,'' என்றான்.

அதைக் கேட்ட மணியன் ''அந்தப் பண்டிதரின் பெயரை இன்னும் ஒருமுறை சொல்லுங்கள். நீங்கள்

ஆஸ்தான வித்வான் ராமநாத பண் டிதர் என்றுதானே சொன்னீர்கள்? எனக்குத் தெரிந்த பண்டிதரா என்று பார்க்கிறேன்,'' என்றான்.

அண்ணாசாமியும் ''அவரை எல் லோருக்கும் தெரியும். இந்த சமஸ் தானத்தின் ஆஸ்தான பண்டிதர் அவர். என் மகள் மாலதியை அவர் தான் சுவீகாரம் எடுத்துக் கொண்டார்,'' என்றான். அதைக் கேட்டு மணிய னும், அவனது பெற்றோரும் ''இது பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்றே!'' என்று மகிழ்ந்தனர்.

அப்போது அண்ணாசாமி ''நான் சொன்னதைக் கேட்டு ஒரேயடியாக மகிழ்ந்து போனீர்களே! என்ன விஷ யம்? அந்தப் பண்டிதர் உங்களுக்கு உறவினரா?'' என்று கேட்டான்.

அப்போது பாலுசாமி ''அவர் சாதாரண உறவினர் அல்ல. என் சம்மந்தியாக ஆகப் போகிறார். அவர் தம் மகள் வீணாவை என் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க எண்ணி என் மகனின் சம்மதத்தைக் கேட் டிருக்கிறார். இவனும் சரி என்று சொல்லி இருக்கிறான். இதுபற்றி என் மனைவியிடம் இவன் கூறவே, என் மனைவி உனக்குக் கொடுத்த வாக் குறுதியைக் கூறினாள். அப்போது இவன் எங்கள் மனம் வருந்தக்கூடாது என்பதற்காக மாலதியைப் பார்த்து விட்டு முடிவு செய்யலாம் எனவே, நாங்கள் கிளம்பி வந்தோம். இங்கே வந்தபின் நீ சுவீகாரம் கொடுத்த மாலதிதான் ராமநாத பண்டிதரின் மகள் வீணா என்று தெரிந்துவிட்டது. எனவே நாங்கள் விரும்பியபடியும் என் மகன் ஆசைப்பட்டபடியும் அவனது திருமணம் நடக்கப் போகி றது,'' என்றான்.

''இதுதான். நல்லவர்களுக்கு அவர்கள் விரும்பியபடியே எல்லாம் நடக்கும் என்பது. நீங்கள் வாக் களித்தபடி மாலதி உங்கள் வீட்டு மருமகள் ஆகப் போகிறாள். எல்லாம் அவன் செயல்,'' என்று கூறி மகிழ்ந் தான் அண்ணாசாமி.

விரைவில் மணியனுக்கும் வீணா விற்கும் திருமணம் நடைபெற்றது. இது பாலுசாமி, அண்ணாசாமி, ராம நாத பண்டிதர், மணியன் ஆகியோர் விரும்பியபடியே நடந்த திருமணம்.





# மர்மக் குளம்

## 20

*(ஜெயசீலனை மர்மக்குள மகேஸ்வரன் பிடித்துக் கொண்டு போய்க் கொண்டிருப்பது சித்தசாதகனுக்குத் தெரிந்தது. இதே சமயம் ஜல ராட்சஸர்களைப் பற்றிய தகவலும் வந்தது. கனகாட்ச மன்னனும் சித்தசாதகனும் ஜெயசீலனைக் காப்பாற்றுவதற்காகப் போய்க் கொண்டிருக்கையில், ஜல ராட்சஸர்கள் தேவ சர்மாவுடனும், மற்றும் சிலருடனும் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். ஜல ராட்சஸர்கள் காடர்கள் வேறு தம்மைத் தாக்குவது கண்டு பயந்து ஓடலானார்கள். அப்போது -)*

**கா**டர்கள் ஜல ராட்சஸர்களைப் பிடிப்பதில் தான் முனைந்திருந் தார்கள். அவர்கள் தாம் எங்கு சென்று கொண்டிருக்கிறோம் என்பதை கவனிக்கவில்லை. ஆனால் ஜல ராட்சஸர்களில் இருவர் உயரமான ஒரு மரத்தின் கிளைகளில் உட்கார்ந்து கொண்டு அங்கு நடப்பதை எல்லாம் கவனித்துக் கொண்டே இருந்தார்கள்.

அவ்விருவரில் ஒருவன் ''பார்த் தாயா? நம் அரசருக்கு எதிரியின் பலம் எவ்வளவு என்று தெரிய வில்லை. முன்பு நாம் மர்மக்குள மகேஸ்வரனைப் போரில் தோற் கடித்துவிட்டோம். ஆனால் இப் போது அவனுக்கு உதவ வேறு யார்யாரோ வந்திருக்கிறார்கள்,'' என்றான்.

ஆனால் மரத்தின் மீதிருந்த மற்றவனோ அவன் சொன்னதைக்



மர்மக் குளத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்களே! அவர்களது நடவடிக்கைகளைக் கவனித்து நம் அரசரிடம் தெரிவிக்க வேண்டாமா?'' என்று கேட்டான்.

அதற்குமற்றவன் ''ஆமாம். நீ சொல்வது சரியே. அதை நீ செய். அவர்கள் மர்மக் குளத்தை நோக்கித் தான் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. நான் அந்த மரக்கால் மனிதனைப் பிடித்துத் தூக்கிக் கொண்டுபோய் நம் அரசர் முன் போடுகிறேன்,'' என்று கூறி விட்டு மரத்திலிருந்து இறங்கி மங்கள வர்மனைப் பிடிக்க அங்கிருந்து சென்றான்.

கேளாதவன் போல வேறு எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பார்த்தது ஜல ராட்சஸர்களைத் துரத்திப் பிடிக்கக் காடர்கள் முயன்று கொண்டிருந்ததைத் தான். எல்லோருக்கும் பின்னால் மரக்காலுடன் நொண்டிக் கொண்டு வந்து கொண்டிருந்த இரணியபுரி சேனாதிபதியின் மகனான மங்களவர்மனைப் பார்த்தான்.

அவன் தன் தோழனிடம் ''அதோ பார்! எல்லோருக்கும் பின்னால் ஒருவன் நொண்டிக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறான். அவனைப் பிடித்துக் கொண்டு போய் நம் அரசர்முன் நிறுத்தினால் என்ன? இவனிடமிருந்து வந்திருக்கும் எதிரியின் பலம் எவ்வளவு என்பதைத் தெரிந்து கொள்ளலாமே!'' என்றான்.

அதற்கு அவனது தோழன் ''அது சரி. அவனுக்கு முன்னால் சிலர்

மங்களவர்மனுக்கோ தன்னை ஒருவன் பிடிக்க வந்து கொண்டிருக்கிறான் என்பது தெரியவில்லை. தன் முன்னால் மர்மக் குளத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் மற்றவர்களின் பின்னால் அவன் போய்க் கொண்டிருந்தான். அவன் தானும் ஜல ராட்சஸர்களுடன் போர் புரிந்து தன் திறமையைக் காட்ட வேண்டும் என்று துடியாய்த் துடித்தான்.

அவன் தான் போரிடப் போவது பற்றி யோசித்துக் கொண்டே நடக்கையில் தன் பின்னால் ஏதோ சத்தம் வருவதை உணர்ந்து திரும்பிப் பார்த்தான்.

அப்போது ஒரு ஜல ராட்சஸன் தன்னைப் பிடிக்கப் பாய்ந்து வருவது கண்டு.சட்டென ஒருபுறமாக விலகினான். அவன் மீது பாய முயன்ற ஜல ராட்சஸன் நிலை தடுமாறி குப்புற

விழுந்தான். அவனது கையிலிருந்த கல் கதாயுதம் சற்று தூரத்தில் போய் விழுந்தது. அவன் தட்டுத் தடுமாறி எழுந்து நிற்க முயன்றான். ஆனால் அவனது கால் சுளுக்கிக் கொண்டதால் ''அட, கடவுளே!'' என்று உரக்கக் கூவினான்.

மங்களவர்மன் தனக்கு வரவிருந்த ஆபத்து விலகிப் போனது குறித்து மகிழ்ந்து போனான். அவன் ஜல ராட்சஸனின் பக்கம் போய் ''அடே! நீ என்னைப் பிடிக்க முயன்று சரியான தண்டனை தான் பெற்றாய். இப் போது உனக்கு யாராவது சிகிச்சை அளித்தாலே உன் கால் சரியாகும். இதற்குமுன் உங்களுக்கும் மர்மக்குள மகேஸ்வரனுக்கும் போர் நடந்ததே, அதில் வெற்றி யாருக்கு? இதற்கு பதில் சொன்னால் பச்சிலைகளைப் பறித்து வந்து அவற்றின் சாற்றைத் தடவி உன் கால் சுளுக்கைப் போக்கு வேன்,'' என்றான்.

இதற்குள் அந்த ஜல ராட்சஸனின் தோழன் தன் கூட்டாளியின் நிலை மையைக் கண்டு தன் கல் கதா யுதத்தைச் சுழற்றியவாறே ஓடோடி வந்தான். அப்போது மங்களவர்மன் தன் கைத்தடியின் பிடியைத் திருகி அதனுள்ளிருந்த வாளை எடுத்தான்.

அதைக் கால் சுளுக்கி நிற்கும் ஜல ராட்சஸனின் கழுத்தின் மேல் வைத்து தன்னை நோக்கி ஓடிவரும் ஜல ராட்சஸனிடம் ''அடே, நான் மூன்று எண்ணுவதற்குள் நீ உன் கல் கதாயுதத்தைத் தூர எறியாவிட்டால் உன் தோழனின் தலை துண்டிக்கப்



பட்டுத் தரையில் உருளும். பிறகு உனக்கும் அதே கதி தான்,'' என்று கூறினான்.

அதைக் கேட்ட ஜல ராட்சஸன் மௌனமாக இருக்கவே, மங்கள வர்மன் ''சரி. ஒன்று, இரண்டு...'' என்று எண்ண ஆரம்பித்து மூன்று என்று சொல்வதற்குள் ஜல ராட்சஸன் தன் கல் கதையைத் தூக்கி எறிந்து விட்டான். அப்போது மங்களவர்மன் ''பேஷ். பேஷ். நீ உன் நண்பனைக் காப்பாற்றிவிட்டாய். என்னுடன் வா! பச்சிலைகளைப் பறித்து சிகிச்சை அளிக்கிறேன்,'' எனக் கூறி அவனை அழைத்துக் கொண்டு அங்கும்இங்கு மாக அலைந்து சில பச்சிலைகளைப் பறித்தான்.

அவற்றை இரு உள்ளங்கைகளி லும் வைத்துக் கசக்கி சாறு பிழிந்து அதை அவன் ஜல ராட்சஸனின் காலில் தடவினான். பிறகு அந்தப்



பச்சிலைச் சக்கையை அவனது காலில் கட்ட வைத்தான். அதன் பிறகு அவன் அந்த ஜல ராட்சஸனிடம் ''நீ இன்னமும் பன்னிரெண்டு மணி நேரத்திற்கு நடக்கவே கூடாது,'' என்றான்.

அதைக் கேட்டு ஜல ராட்சஸர்கள் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு சிணுங்கினார்கள். அவர்கள் வேவு பார்ப்பவர்கள் என்றும் அவர்களிடம் இருந்து எதையும் கேட்டு தெரிந்து கொள்ள முடியாது என்றும் அவன் தெரிந்து கொண்டான். அதனால் அவர்களை அப்படியே விட்டுவிட்டு அவன் அங்கிருந்து மர்மக் குளத்தை நோக்கிச் சென்றான்.

அவன் சிரமப்பட்டு நடந்து சென்று கொண்டிருந்தபோது ஒரு மேட்டிலிருந்து 'மங்களவர்மா!' என்று கூப்பிடும் குரல் கேட்டது. அவன் நிமிர்ந்து பார்த்தான்.

அங்கு ஒரு மரத்தில் காட்டுக் கொடிகளால் கட்டப்பட்ட மனிதன் ஒருவனைப் பார்த்தான். அவன் மர்மக்குள மகேஸ்வரனின் அன்னப் பறவை ரதத்தை ஓட்டுபவன். அவனைக் கண்ட மங்களவர்மன் ''நீயா? இங்கே எப்படி வந்து அகப்பட்டுக் கொண்டாய்?'' என்று கேட்டான்.

அத்தேரோட்டியும் ''வர்மா! கொஞ்சம் மெதுவாகப் பேசு. எமன் போல ஒருவனும், பயங்கர வானரமும் சில வீரர்களும் வந்து கொண்டு இருக்கிறார்கள். வருபவர்கள் நம் எதிரிகளான ஜெயசீலனும், சித்தசாதகனும், அவர்களுடைய ஆட்களும் என்றே நினைக்கிறேன்,'' என்றான்.

அப்போது மங்களவர்மன் ''இப்போது அவர்கள் நம் எதிரிகள் அல்ல. இவர்களோடு நம் வைத்தியதேவன் வேறு இருப்பதால் இவர்களை நம் நண்பர்களாகக் கூடக் கருதலாம். வந்து கொண்டிருக்கும் அவர்களைக் கை தட்டிக் கூப்பிட்டு இங்கே வரச் சொல்!'' என்றான். வைத்திய தேவன் வருகிறான் என்று கேட்டதும் தேரோட்டியின் மனம் பூரித்தது.

தேரோட்டியும் உரத்த குரலில் ''ஐயா! என்னைக் காப்பாற்றுங்கள். கொடிகளில் சிக்கி விடுபட முடியாமல் தத்தளிக்கிறேன்,'' என்று கூவினான். முதலில் அந்தக் கத்தலை மனிதக் குரங்குதான் கேட்டது. உடனே அது நின்று உயரப் பார்த்து விட்டுத் தன் மீது உட்கார்ந்திருந்த சித்தசாதகனுக்கு சைகை புரிந்தது.

அதைக் கேட்ட தேவசர்மாவும் ''இது மகேஸ்வரனின் தேரோட்டியின் குரல் போல இருக்கிறதே!'' என்றான். அப்போது சித்தசாதகன் ''அப்படியா! ரொம்ப வசதியாகி விட்டது. அவனைப் பிடித்து இரண்டு 'தட்டு' தட்டினால் மர்மக் குளம் பற்றிய விவரங்களைக் கக்கிவிடுவான்,'' என்றான்.

மனிதக் குரங்கு வேகமாக ஓடி தேரோட்டி இருந்த மரத்தின் கீழ் போய் நின்றது. சித்தசாதகனைக் கண்ட மங்களவர்மன் ''சாதகா! நம் ஆள் ஒருவன் மரத்தின் மீது சிக்கிக் கொண்டிருக்கிறான். நீ அதில் ஏறி அவனை விடுவிக்க வேண்டும்,'' என்றான்.

சாதகனோ, ''எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறதே! அரசகுமாரனையும் அரசகுமாரியையும் கடத்திச் சென்ற மகேஸ்வரன் இப்போது ஜெயசீலனையும் பிடித்துக் கொண்டு போகிறானே! இப்போது மர்மக் குளம் அவன் வசம் இருக்கிறதா அல்லது ஜல ராட்சஸர்கள் அதைக் கைப்பற்றிவிட்டார்களா என்று தெரியவில்லையே!'' என்றான். அப்போது கனகாட்ச மன்னன் தன் வீரர்களோடு அங்கு வந்தான்.

தேரோட்டியோ, ''ஐயோ! என்னைக் காப்பாற்றுங்கள். ஒரு மலைப் பாம்பு என்னை நோக்கி வந்து கொண்டிருக்கிறது,'' என அலறினான். உடனே சித்தசாதகன் மனிதக் குரங்கை ஏவவே, அது மின்னல் வேகத்தில் போய் தேரோட்டியை ஒரு கையால் அலாக்காகத் தூக்கியது.

இதற்குள் மலைப் பாம்பு சீறிக் கொண்டு வரவே, அதை மற்ற கையால் பிடித்து அழுத்தியது. இச்



சமயத்தில் ஜல ராட்சஸ கும்பல் ஒன்று கோஷம் போட்டுக் கொண்டு அங்கு வந்தது.

இப்படியாக அங்கு நிலைமை பதட்டமாக இருந்தது. ஒருபுறம் மர்மக்குள மகேஸ்வரன் ஜெயசீல னையும் மற்றும் ஓரிருவரையும் பிடித்துக் கொண்டுபோய்க் கொண் டிருந்தான். ஜல ராட்சஸர்கள் வேறு ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தார்கள். சித்தசாதகனும் வானரமும் அன்ன ரதத் தேரோட்டியை விடுவிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள்.

மங்களவர்மன் ஜெயசீலன் காட்டில்தான் இருக்கும் பகுதிக்கு வந்து மர்மக்குள மகேஸ்வரனிடம் அகப்பட்டதைத் தெரிந்து கொண்டு விட்டான். அவனைப் பற்றி மகேஸ் வரனிடம் கூறவும் ஜல ராட்சஸ னிடம் கூறவும் ஜல ராட்சஸர்கள் மர்மக் குளத்தைத் தாக்கிப்போர் புரிந்தால் அதில் தன் போர்த் திற னைக் காட்டவும் துடித்தான்.

சித்தசாகனோ மனிதக் குரங்கின் உதவியால் அன்னரதத் தேரோட் டியை விடுவித்தப்பின் அவன் வழி காட்ட, மர்மக்குளத்தை அடைந்து ஜெயசீலனுக்கு உறுதுணையாக இருக்க வேண்டும் என்று எண்ணி னான். இப்படியாக எல்லோருமே மர்மக் குளத்திற்குச் சென்று கொண்டு இருந்தார்கள்.

ஜல ராட்சஸர்களுடன் நீர் யானை யின் மீது அமர்ந்து வந்தவன் தன் கல் கதையைச் சுழற்றியவாறே ''இங்கிருந்து எதிரிகளில் ஒருவன் கூடத் தப்பிவிடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று கட்டளை இட்டான்.

அந்தக் கட்டளையை யாராலும் நிறைவேற்ற முடியாதே. ஏனெனில் அவர்களுக்கு எதிர்பாராத விதத்தில் ஆபத்து வந்தே விட்டது.

ஆனால் மரத்தின் மீது ஏறி மலைப் பாம்பை எடுத்து வைத்திருந்த மனி தக் குரங்கு அதைத் தூக்கி எறிந்து விட்டு நீர் யானையின் மீது அமர்ந் திருந்தவனைப் பார்த்ததும் உடனே அவன் மீது குதித்தது.

*(அடுத்த இதழில் முடிவுறும்)*



நவீன
வேதாளக்
கதை

# பணம் கொடுத்த மரம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலை வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைத் தூக்கிச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் நீ விடாமுயற்சியாக ஏதோ ஒரு வேலையைச் செய்யத் துடிப்பது நன்கு தெரிகிறது. உனக்கு வழியில் சிரமம் தெரியாது இருக்க சந்திரன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.



நல்லூரில் நவநீதன் என்ற பணக்காரன் தன் மனைவி கங்காவுடன் பெயரும் புகழும் பெற்று வாழ்ந்து வந்தான். அவர்கள் இருவருமே நல்லவர்கள். தான, தர்மம் தாராளமாகச் செய்பவர்கள். அவர்களிடம் யார் வந்து கேட்டாலும் இல்லை என்ற பதில் அளிக்காமல் அத்தம்பதிகள் பணத்தைக் கொடுத்து அனுப்பி வந்தார்கள்.

எவ்வளவுதான் பணம் குவிந்திருந்தாலும் எடுத்துக் கொடுக்கக் கொடுக்கக் குறைந்து கொண்டுதானே போகும்? அத்தம்பதிகளின் மகன் சந்திரன் வளர்ந்து பதினாறாவது வயதை அடைந்தபோது நவநீதத்திடம் அவன் வசிக்கும் வீடு ஒன்றுதான் மிஞ்சியது. மீத சொத்து, பணம் எல்லாம் தான, தர்மத்தில் போய் விட்டது. சந்திரனுக்கு அதுவரை தன் குடும்பத்தின் உண்மை நிலை தெரியவில்லை. அவனும் அதே ஊரைச் சேர்ந்த சிவசாமி என்பவனும் வைத்தியப் படிப்பிற்காக வெளியூரில் இருந்துவிட்டு வந்தார்கள். சிவசாமி ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன். அவனது படிப்பிற்கான செலவை நவநீதம் தான் கொடுத்தான்.

இரு இளைஞர்கள் தம் படிப்பு முடிந்ததும் தம் ஊருக்கு வந்தார்கள். அப்போதுதான் சந்திரனுக்குத் தன் குடும்பத்தின் நிலை தெரிந்தது. அவன் தன் தந்தையிடம் ''முன்னோர் வைத்துவிட்டுப் போன சொத்தையும் பணத்தையும் இப்படிக் கரைத்து என் வாழ்க்கையைப் பாழாக்கிவிட்டீர்களே! இப்போது நான் என்ன செய்வது?'' என்று கோபப்பட்டுக் கேட்டான்

நவநீதனோ, ''மகனே! நாம் இறந்த பிறகு எதையும் நம்முடன் எடுத்துக் கொண்டு போகப் போவதில்லை. நம்மால் உழைத்து வாழ முடியும். தர்மம் தலை காக்கும். நீயோ வைத்தியத் தொழிலுக்காகப் படித்தாய். அத்தொழிலை ஆரம்பி. அதன் மூலம் கிடைக்கும் வருமானம் நம் குடும்பத்திற்குப் போதும்,'' என்றான்.

சந்திரன் வைத்தியத் தொழிலை அந்த ஊரில் ஆரம்பித்தான். அதன் மூலம் போதிய வருமானம் கிடைத்த போதிலும் அவன் திருப்தி அடையவில்லை. மேலும் சிவசாமி வேறு அதே ஊரில் வைத்தியத் தொழிலை ஆரம்பித்துவிட்டான். அவன் பெயரும்புகழும் நிறையப் பெற்று வந்தது

சந்திரனுக்கு மிகப்பொறாமையாக இருந்தது.

அதனால் சந்திரன் தன் தந்தையிடம் ''பார்த்தீர்களா? நீங்கள் கொடுத்த பணத்தில் படித்து எனக்குப் போட்டியாகத் தொழில் புரிந்து சிவசாமி கை நிறைய சம்பாதிக்கிறான். எப்படிப்பட்ட துரோகம் இது!'' என்று ஆத்திரப்பட்டுக் கேட்டான்.

நவநீதமோ, ''மகனே! தர்மம் செய்ததற்குப் பிரதிபலனை எதிர் பார்க்கக் கூடாது. மேலும் சிவசாமி தன் தொழிலைச் செய்து சம்பாதிக் கிறான். நீயும் சம்பாதிக்கிறாய். உனக்குக் கிடைப்பதைக் கொண்டு நீ திருப்திப்படு. உன் உழைப்பால் முன்னுக்கு வா!'' என்று சந்திரனுக்கு அறிவுரை கூறினான். ஆனால் சந் திரனோ அதை ஏற்கவில்லை. இவ் வாறு தந்தைக்கும் மகனுக்கு மனக் கசப்பு ஏற்பட்டுள்ளது என்பதை அவ்வூர் மளிகைக் கடை மாணிக்கம் அறிந்தான்.

மாணிக்கத்திற்கு மரகதம் ஒரே மகள். அதனால் அவன் தன் மக ளுக்குத் தகுந்த ஒருவனை மணம் செய்து வைத்து மாப்பிள்ளையைத் தன் வீட்டிலேயே வைத்துக் கொள்ள விரும்பினான்.

எனவே அவன் சந்திரனைக் கண்டு பேசி ''சந்திரா! உன் குடும்பம் தான, தர்மங்கள் செய்து பெயர் பெற் றுள்ளது என்பது எனக்குத் தெரியும். ஆனால் உன் குடும்பத்தின் தற் போதைய பொருள் நிலை மிகவும் தாழ்ந்து போயிருப்பதும் எனக்குத்



தெரியும். இதற்குக் காரணம் உன் பெற்றோர் கண்ணை மூடிக் கொண்டு தான, தர்மங்களைச் செய்ததே. நீ அவர்களோடு சேர்ந்து இருந்தால் முன்னுக்கு வரவே முடியாது. நீ சம்பாதிப்பதைக் கூட வாங்கி தானம் செய்துவிடுவார்கள். எனவே, நீ என் மகளை மணந்து கொண்டு என் வீட்டிலேயே இரு. அப்போது தான் உன்னிடம் பணம் சேரும்,'' என்றான்.

சந்திரனுக்கு மாணிக்கம் கூறியது மிகவும் சரியே என்று தோன்றியது. அவன் தன் தந்தையிடம், ''அப்பா! நான் மாணிக்கத்தின் மகள் மரகதத்தை மணந்துகொண்டு அவர் வீட்டில் இருந்து என் தொழிலை செய்யப் போகிறேன்,'' என்றான்.

நவநீதமும் ''நீ பெரியவனாகி விட்டாய். நல்லது எது, கெட்டது எது என்பதை நீயே தெரிந்து கொள்ள முடியும். நான் உன் விருப்பத்திற்குத்



தடையாக இருக்க மாட்டேன். நீ உன் இஷ்டப்படியே செய்!'' என்றான். அதுகேட்டு சந்திரன் ''நான் உங்களை விட்டுப் போய்விட்டால் உங்களுக்கு வருமானம் ஏது?'' எனவே, நவநீத மும் ''அதுபற்றிக் கவலைப்படாதே! ஆண்டவன் இருக்கிறான். அவன் பார்த்துக் கொள்வான். நான் செய்த தான, தர்மங்கள் என்னைக் கைவிட்டு விடாது,'' என்றான்.

சந்திரன் மரகதத்தை மணந்து கொண்டு மாமனார் வீட்டிற்குப் போய்விட்டான். நவநீதம் சிரம தசை யில் இருப்பதைக் கண்டு சிவசாமி அவனைக் கண்டு ''எப்படி இருக் கிறீர்கள்? உங்களுக்கு சிரமம் எதுவும் இல்லையே?'' என்று கேட்டான்.

அவன் பணம் கொடுத்து உதவ வந்திருக்கிறான் என்பதை ஊகித்த நவநீதம் அந்த உதவியை ஏற்க விரும்பவில்லை. அப்படிக் கூற விரும்பாமல் அவன் சிவசாமியிடம், ''நாங்கள் சௌக்கியமாகவே இருக் கிறோம். எங்களுக்கு எவ்விதமான குறையும் இல்லை,'' என்று கூறினான்.

அதைக் கேட்ட சிவசாமி நவநீதம் நினைப்பதை ஊகித்துவிட்டான். மகனால் புறக்கணிக்கப்பட்டுத் தாழ் நிலையிலுள்ள அவனுக்கு எப்படி யாவது பண உதவி செய்ய விரும்பி னான். அதனால் அவன் சற்று மௌன மாக இருந்துவிட்டுப் பிறகு ''நான் இங்கு வந்தது என் வேலையாகத் தான். உங்கள் வீட்டுக் கொல்லைப் புறத்தில் ஒரு மரம் இருக்கிறது. அதன் காய்களைக் கொண்டு மிக உயர்ந்த மருந்து தயாரிக்க முடியும் என்று தெரிந்து கொண்டேன். அது வருடம் முழுவதும் காய்க்கும் மரம். அதன் ஒரு காயின் விலை பத்து பவுன். அவ்வளவு விலை கொடுத்து நான் எல்லாக் காய்களையும் வாங்கிக் கொள்ள முடியாது. தினமும் ஒருகாய் கொடுங்கள். நானும் தினமும் ஒரு பவுன் கொடுக்கிறேன். நீங்கள் உங்களது ஆயுட்காலம் முழுவதும் எனக்கு தினமும் ஒரு காயை ஒரு பவுனுக்கு விற்பதாக எனக்கு ஒரு பத்திரம் எழுதிக் கொடுத்தால் நீங்கள் எனக்குப் பெருத்த உதவி செய்ததாக இருக்கும்,'' என்றான்.

நவநீதமும் ''எல்லாம் சரி. நீ கூறுகிறபடியே காய்களைக் கொடுக் கிறேன். நீயும் அதற்கு விலையாக தினமும் ஒரு பவுன் கொடுத்துவிட்டு எடுத்துச் செல். ஆனால் பத்திரம்

எழுது வானேன்? வாய் வார்த்தை மட்டும் போதுமே!'' என்றான்.

அதற்கு சிவசாமி ''ஐயா! இந்தக் காய் பற்றி வேறு யாருக்கும் தெரியக் கூடாது. சரியானபடி இதைப் பயன் படுத்தினால் உயர்ரக மருந்து கிடைக் கும். மருந்து தயாரிப்பில் ஒரு சிறு தவறு நேர்ந்தாலும் அது விஷமாகி விடும். இதுபற்றி சரியாகத் தெரி யாமல் பணத்திற்கு ஆசைப்பட்டுப் பலர் இதை வாங்கப் போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள். அவர்களால் மக்கள் மடிவார்கள். எனவே நீங்கள் பத்திரம் எழுதிக் கொடுத்துவிட்டால் என்னைத் தவிர வேறு யாரும் இந்தக் காயை வாங்க முடியாது. இப்படிச் செய்வது பொதுமக்களின் நலம் கருதித்தான்,'' என்றான்.

அதைக் கேட்ட நவநீதம் சற்று யோசித்து ''ஆமாம். நீ சொல்வது சரியே. நீ விரும்பியபடியே பத்திரம் எழுதிக் கொடுக்கிறேன்,'' என்று கூறி பத்திரமும் எழுதிக் கொடுத்தான்.

அன்றுமுதல் தினமும் ஒரு பவுனைக் கொடுத்து சிவசாமி அவன் வீட்டு மரத்தின் காயை வாங்கிக் கொண்டு போகலானான். இதனால் நவநீதத்தின் பொருளாதார நிலையில் பெருத்த முன்னேற்றம் ஏற்பட்டது. முன்போல தான, தர்மங்களைச் செய்தும் வரலானான். தன் தந்தையின் நிலை மாறியதைக் கண்ட சந்திரன் அதற்கு என்ன காரணம் என்று யோசிக்கலானான்.

அவனது மனைவி மரகதமோ,



''உங்கள் தந்தை உங்களை ஏமாற்றி விட்டார். அவரது முன்னோர் விட்டுப் போன சொத்து இன்னமும் அவரிடம் இருக்கிறது. அதில் உங்கள் பாகத்தைக் கேட்டு வாங்குங்கள்,'' என்று தூண்டிவிட்டாள்.

சந்திரனும் தன் தந்தையைக் கண்டு பூர்வீக சொத்து பற்றிக் கேட்டான். அப்போது நவநீதம் அப்படி எதுவும் இல்லை என்று கூறி சிவசாமி தினமும் ஒரு பவுன் கொடுத்து ஒரு காய் வாங்கு வதைக் கூறினான். அதுகேட்டு சந் திரன் ''இவ்வளவு மதிப்புள்ள காய் நம் வீட்டில் இருப்பது பற்றி என் னிடம் ஏன் கூறவில்லை? என் சம் மதம் இல்லாமல் எப்படிப் பத்திரம் எழுதிக் கொடுக்கலாம்? இப்போதே கிராம அதிகாரியிடம் இது பற்றிப் புகார் செய்கிறேன்,'' என்றான்.

நவநீதமும் ''புகாரெல்லாம் வேண் டாம். நான் இப்போதே சிவசாமியை

வரவழைக்கிறேன். பேசித் தீர்த்துக் கொள்ளலாம்,'' என்று கூறி சிவசாமியை வரவழைத்தான்.

சிவசாமியும் வந்து விஷயத்தைப் புரிந்து கொண்டு ''சந்திரா! இந்த வீட்டு மரத்துக் காய் புங்கைக் காய். பைசாக் கூட பெறாதது. ஆனால் உன் தந்தை மட்டும் அதை எனக்குக் கொடுத்தால் அதற்கு விலை ஒரு பவுன். புரிந்ததா, இப்போது?'' எனவே, சந்திரன் அதைக் கேட்டு வெட்கமடைந்து ''சிவசாமி! நீதான் எவ்வளவு உயர்ந்தவன்,'' எனக் கூறி வணங்கிவிட்டுச் சென்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''சிவசாமியின் நடத்தை வேடிக்கையாக இல்லை? சாதாரணப் புங்கைக் காயை ஒரு பவுன் கொடுத்து ஏன் வாங்கினான்? அவன் கூறிய பதிலைக் கேட்டு சந்திரன் ஏன் வெட்கப் பட்டான்? இக்கேள்விகளுக்கு பதில் தெரிந்திருந்தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும் ''தனக்குப் பெரிதும் உதவிய நவநீதம் மகனால் புறக்கணிக்கப்பட்டு சிரமப்படுவது கண்டு சிவசாமி அவனுக்கு உதவச் சென்றான். அவன் அதை ஏற்க மறுக்கவே, அவனுக்கு எப்படியாவது உதவிவிட வேண்டும் என்று எண்ணி, பைசா பெறாத புங்கைக்காயை விலையுயர்ந்த மருந்துக் காய் எனக் கூறி தினமும் ஒரு பவுன் கொடுத்து நவநீதத்தை சுகமாக வாழ வைத்தான். சாதாரண புங்கைக் காயை நவநீதம் மட்டுமே தனக்கு விற்றால் தான் ஒரு பவுன் கொடுப்பதாகச் சிவசாமி கூறியது கேட்டு சந்திரன் அதன் பொருளைப் புரிந்து கொண்டான். தான் தந்தைக்கு உதவவில்லை என்பதையும் தன் தந்தையின் உதவியால் படித்து முன்னுக்கு வந்த சிவசாமி நன்றி மறக்காமல் உதவி இருக்கிறான் என்பதும் கண்டே சந்திரன் வெட்கம் அடைந்தான்,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






## சுவர் சித்திரங்கள்



கேரள மாநிலத்தில் திருச்சூர் அருகில் உள்ள காலடியில் அமைந்துள்ள ஸ்ரீசங்கர பல்கலைக்கழகத்தின் 1200 அடி நீளச் சுவரில் சித்திரங்கள் வரையப்பட்டுள்ளன. ஐந்தடி உயரமுள்ள அச்சித்திரம் ஒரு குரு தம் சீடர்களுக்கு கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய காலங்களில் போதிக்கப்படுவதைக் காட்டுகிறது. ராமாயணம், மகாபாரதம், சாகுந்தலம், மேகதூதம், ரகுவம்சம், ஆதிசங்கரரின் வாழ்க்கை ஆகியவற்றில் இருந்தும் காட்சிகள் சித்தரிக்கப்பட்டுள்ளன. மூன்று வருடங்களில் இவை வரையப்பட்டு 1998ல் முடிக்கப்பட்டது. இது கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்றுள்ளது.

## கிராமமே சைவ உணவை ஏற்றுள்ளது!

இப்போதெல்லாம் பலர் சைவ உணவை உண்பவர்களாக மாறி வருகிறார்கள். ஒரிஸ்ஸாவிலுள்ள ஒரு கிராமத்து ஐம்பது குடும்பங்களும் மாமிச உணவை சமைப்பதை விட்டுவிட்டு சைவ உணவை ஏற்றுள்ளன. இந்த ஊரின் பெயர் பெண்ட சாலியா. இது தேன்கனால் மாவட்டத்தில் உள்ளது. இங்குள்ளவர்கள் வைஷ்ணவர்கள். சாது அச்சுதானரைப் பின்பற்றுபவர்கள். அமைதியான வாழ்க்கை வாழ்பவர்கள். இயற்கையின் சீற்றங்களும் தொற்று வியாதிகளும் இங்கு அணுகியதே இல்லை. மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் இங்கு எவ்விதத் தொல்லையும் இல்லை.



இந்தியப் புராதனக் கதைகள் – 18

# எதிர் நீச்சல் போடு!



ஹரித்துவார் இமயமலையின் அடிவாரத்தில் உள்ள புனிதத் தலம். இங்கு பல சாதுக்களும், சன்னியாசிகளும் தம் குடில்களையும் ஆசிரமங்களையும் அமைத்து வாழ்ந்து வந்தார்கள்.

ஒரு பணக்கார வியாபாரி தன் ஊரிலிருந்து இங்கு வந்து முதுபெரும் சன்னியாசியை தரிசித்து அவர்முன் அமர்ந்து மனசாந்தி பெற்று வந்தான்.

வியாபாரத்தில் சச்சரவு, தனிப்பட்டோர், உறவினர்களுடன் மனத்தாங்கல், வீட்டில் மனைவி-மக்கள் தொடர்பான சிக்கலான பிரச்சினைகள் என்று யாவற்றையும் அந்த வியாபாரி தன் குருவாக பாவிக்கும் அந்த சன்னியாசியிடம் கூற அவர் அவனுக்கு மனசாந்தி ஏற்படும் வகையில் உபதேசங்களைக் கூறி வந்தார். வியாபாரியும் அதனால் மனநிம்மதி அடைந்து வந்தான்.

வியாபாரி தன் குரு சொல்வதை மௌனமாக அமர்ந்து கேட்டு வந்த போதிலும் அவர் சொன்னதைப் புரிந்து கொண்டான் என்று சொல்லி விட முடியாது. சில சமயங்கள் குரு சொல்வது அவன் நினைப்பதற்கு நேர்மாறாகக் கூட இருக்கும்.

உதாரணத்திற்கு அவன் தன் தனிப்பட்ட பிரச்சினைகளை அவரிடம்

கூறினால் அவர் ''அப்பனே! உனக்கு மனசாந்தி வேண்டுமானால் நீ உன்னையே கடவுளுக்கு அர்ப்பணம் செய்து கொள்!'' என்பார்.

''வியாபாரத்தில் என்னை ஒரு கூட்டாளி ஏமாற்றினால் அதற்குக் காவல்துறையையோ அல்லது நீதித்துறையையோ தானே அணுக வேண்டும்? அப்போது தானே நியாயம் கிடைக்கும். இப்படிச் செய்வதை விட்டு கடவுளிடம் சென்றால் பயன் என்ன?'' என்று வியாபாரி அவரிடம் கேட்டான்.

அப்போதும் அவர் ''நீ கடவுளிடமே உன்னைக் அர்ப்பணித்துக் கொள்!'' என்றே கூறினார். மேலும் ''நீ சொல்லும் முறையில் ஒரு சிக்கல் தீர்ந்தால் இன்னொன்று தலை தூக்கும். இப்படியே போனால் மன சாந்தி இராது. நிரந்தர நிம்மதி அடைவதற்கு கடவுளிடம் உன்னை அர்ப்பணம் செய்து கொள்வது தான் ஒரே வழி,'' என்றார்.

ஒருநாள் இரவு வியாபாரிக்கும் சன்னியாசிக்கும் இடையே பலத்த விவாதம் நடந்தது. அது தொடர்ந்து நள்ளிரவு வரை போயிற்று. சன்னியாசி பொறுமையை இழக்காமல் மௌனமாகவே இருந்தார். வியாபாரிக்குத் தூக்கம் வரவே அவன் எழுந்து உறங்கப் போய்விட்டான். சன்னியாசியும் படுத்துக் கொண்டார்.

விடியும்போது அவர் எழுந்து போய் வியாபாரியைத் தட்டி எழுப்பித் தன்னுடன் வரச் சொன்னார். அவனும் திகைத்துப் போய் அவர் பின்னாலேயே சென்றான்.

அவர் அவனை கங்கைக் கரைக்கு அழைத்துப் போய் ஓரிடத்தில் நிறுத்தினார். அதற்குமுன் ஐந்து நாட்களாகத் தொடர்ந்து மழை பெய்ததால் கங்கையில் நுங்கும்நுரையுமாய் சுழல்களுடன் பயங்கர வெள்ளம் பெருகி சீறிப் பாய்ந்து கொண்டு



இருந்தது. சன்னியாசி ஓரிடத்தைச் சுட்டிக் காட்டி ''அங்கே நீ என்ன பார்க்கிறாய்?'' என்று கேட்டார்.

வியாபாரியும் ''அடடா! எவ்வளவு பெரிய யானை வெள்ளத்தில் சிக்கித் தவிக்கிறதே! என்ன முயற்சி செய்தும் அதனால் நீரோட்டத்தை எதிர்க்க முடியவில்லையே! வெள்ளத்தில் அடித்து செல்லப்படுகிறதே!'' என்றான்.

அப்போது சன்னியாசி ''அது சரி. இங்கே இந்த மீன் குஞ்சைப் பார்!'' என்றார்.

வியாபாரியும் ''ஆகா! இது வெள்ள வேகத்தை எதிர்த்து நீச்சல் போட்டுக் கொண்டு இருக்கிறதே!'' என்று ஆச்சரியப்பட்டுக் கூவினான்.

சன்னியாசியும் ''இவற்றைப் பார்த்தபின் உனக்கு ஏதாவது புரிந்ததா? பலம் பொருந்திய மிகப்பெரிய யானை ஆற்றில் இறங்கி வெள்ள வேகத்தை எதிர்க்க முடியாமல் வேகத்தில் அடித்துச் செல்லப்பட்டது. ஆனால் நீரிலேயே உள்ள மீன் குஞ்சு வெள்ள வேகத்தை எதிர்த்து நீச்சல் போட்டு அதிலேயே இருந்து உயிர் தப்புகிறது. நீ கடவுளிடம் சரணடைந்தால் அவருள் இருக்கிறாய். அவரில் எவ்விதச் சலனமும் ஏற்படாது. அதனால் நீயும் கவலையற்று இருப்பாய். இப்போது புரிந்ததா?'' என்றார்.

வியாபாரியும் சன்னியாசியைப் பணிவுடன் வணங்கி ''சுவாமிகளே! புரிந்துவிட்டது. வாழ்க்கை என்பது பயங்கர நீரோட்டம் போன்றது தான் அதில் நிலைத்திருக்க என்ன தான் பலம் இருந்தாலும் எதிர் நீச்சல் போட வேண்டும். மீன் குஞ்சு இதை அறிவுறுத்தியது. ஆம். வாழ்க்கையில் பணபலத்தைக் கொண்டு பிரச்சினைகளைத் தீர்க்க முடியாது. கஷ்டங்களை எதிர்த்துச் சமாளிக்க வேண்டும். நான் வறட்டுப் பிடிவாதமாக இருந்து விட்டேன். என்னை மன்னியுங்கள்!'' என்றான்.



# செய்திச் சுடர்

## கடைசி விருப்பம் நிறைவேறியது



ஹுவாங்கே என்ற பத்து வயது சிறுவன் புற்றுநோயால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் தான் இறப்பதற்குமுன் தலைநகர் பெய்ஜிங் கிற்குப் போய் புகழ்பெற்ற தியானன்மென் சதுக்கத்தைப் பார்க்க விரும்புவதாகத் தன் தந்தை ஹுவாங்ஜியோ யோங்கிடம் கூறினான். ஏழைத் தந்தையான அவன் தன் மகனைத் தன் ரிக்ஷாவில் உட்காரச் சொல்லித் தன் ஊரிலிருந்து 2000 கி.மீ. தொலைவிலுள்ள பெய்ஜிங்கிற்கு, காலால் ரிக்ஷாவை மிதித்து ஓட்டி 62 நாட்களுக்குப் பின் தலைநகரை அடைந்தான். சிறுவனது விருப்பம் நிறைவேறியது. அதன் பிறகே அவனது உயிரும் உடலைவிட்டுப் பிரிந்தது.

## இனி இந்தியாவில் யூதர்கள் இல்லை!

இந்தியாவில் கடைசியாக இருந்த யூதக் குடும்பம் இஸ்ரேலுக்குப் புறப்பட்டுப் போய்விட்டது. ஜோஸப் சிமோன், அவரது மனைவி யஹூதித், அவர்களது மக்கள் சாம், சுசன் ஆகியோர் கேரளாவிலுள்ள பரவூரில் 600 ஆண்டுகளாக இருந்து வந்த அவர்களது திருச்சபையின் முன் சில நிமிடங்கள் நின்றுவிட்டுப் பிறகு காரில் ஏறி அங்கிருந்தவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு அத்தெரு வழியே சென்றார்கள். யூதர் தெரு எனப்படும் அத்தெருவில் யூதர்கள் மட்டுமே முன்பு வசித்தனர். ஆனால் அங்கிருந்து ஒவ்வொரு குடும்பமாக இஸ்ரேலுக்குப் போகலாயிற்று. இதனால் ஜோஸபின் குடும்பம் ஒன்று மட்டும் இருக்கவே, அதனால் விழா, பண்டிகைகளை சம்பிரதாயப்படி நடத்த முடியவில்லை. எனவே தம் மக்களின் திருமணங்களையும் செய்ய முடியாது எனக் கண்டு அவர் தம் குடும்பத்தோடு இந்தியாவைவிட்டுப் போய்விட்டார்.



## உத்தராஞ்சலின் நாட்டுப்புறக் கதை

*உத்தராஞ்சல் நம் நாட்டில் அண்மையில் அமைக்கப்பட்ட புதிய மாநிலங்களில் ஒன்று. உத்திர பிரதேஷின் 13 மாநிலங்களைத் தனிப்படுத்தி டேராடூனைத் தலை நகராகக் கொண்டு 2000 செப்டம்பரில் இம்மாநிலம் உருவாகியது.*

*மலைகள் நிறைந்த இந்தப் பகுதியை தேவபூமி எனக் குறிப்பிடுகிறார்கள். இதில் பல புனிதத் தலங்கள் உள்ளன. பத்ரிநாத், கேதாரநாத், கங்கோத்ரி, யமுனோத்திரி என்பன அவற்றில் சில.*

*இதன் கிழக்கே நேபாளமும், வடக்கே சீனாவும், மேற்கே ஹரியானாவும், ஹிமாசலப் பிரதேஷும் உள்ளன. இதன் பெரும் பகுதி மலைப்பாங்கானது. இதன் 10 சதவீதமே சமவெளிப் பகுதியாகும். கங்கை, யமுனை, பாகீரதி, அலக்நந்தா போன்ற பல நதிகளின் உற்பத்தி இடம் இம்மாநிலமே.*

*உத்தராஞ்சலின் பரப்பளவு 55845 சதுர கி.மீ. இதன் மக்கள் தொகை 84,79,562. ஹிந்தி, கட்வாலி, குமோனி முதலியன இதன் முக்கிய மொழிகளாகும்.*

# பூனை, நாயால் திருமணம்

**பௌ**ரி மலைச்சாரலில் வயதான கிழ தம்பதிகள் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தார்கள். அவர்களின் மகன் நேகி. அவன் கள்ளம், கபடு தெரியாதவன். அப்பாவி. அவன் பார்க்க மிக அழகாகவும் இருந்தான். அவர்கள் வசித்த வீட்டருகே ஒரு சிறிய ஓடை பாய்ந்து கொண்டிருந்தது. நேகி அநேகமாக எப்போதும் அதன் கரையில் உட்கார்ந்து தன் குழலிசையைப் பரப்பிக் கொண்டு இருப்பான்.



அவனருகே ஆடுகள் மேய்ந்து கொண்டிருக்கும். உயர்ந்த மரங் களிடையே சூரிய கிரணங்கள் ஒளி வீசும். பறவைகளையும் மிருகங் களையும் கொஞ்சம் கூட சீண்டாமல் தன் போக்கிலேயே இருப்பான். ஆனால் கிழத் தம்பதிகளோ நேகி யைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். தங்கள் காலத் திற்குப் பின் நேகி எப்படித்தான் வாழப் போகிறானோ என்று எண்ணி அவ்வப்போது பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் கிழவி தன் கணவனி டம் ''நேகி என்ன தான் செய்யப் போகிறானோ? எப்படித் தான் வாழப் போகிறானோ?'' என்று கூறித் தன் மனவேதனையை வெளிப்படுத்தி னாள். அப்போது அவளது கணவன் ஆடுகளின் பாலைக் கறந்து கொண்டு இருந்தான்.

தன் மனைவி கேட்டதற்கு அவன் பதில் எதுவும் கூறவில்லை. அவனது முகத்தில் சுருக்கங்களும் அதுக்கல் களும் விழுந்திருந்தன. அவனது கண்கள் பனி படர்ந்த மலைச் சிக ரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தன. அப்போது நேகியின் குழலின் இசை மெல்லிய காற்றோடு சேர்ந்து வந்தது.

அன்றிரவு கிழவனுக்குத் தூக்கமே வரவில்லை. அவன் தன் படுக்கை யில் புரண்டு கொண்டே இருந்தான். அவனது போர்வை சுருண்டு ஒரு மலைப் பாம்புபோலக் கிடந்தது. விடியும்போது அவன் எழுந்து தன் மகனைத் தூக்கத்திலிருந்து எழுப்பி



''நேகி, நான் உன்னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைக் கூற வேண்டும்,'' என்றான். நேகியும் கண் களைக் கசக்கியவாறே விழித்து எழுந்தான்.

அப்போது அருணோதய வேளை. மலைச் சிகரங்களின் மீது மெதுவாக ஒளி பரவிக் கொண்டிருந்தது. சேவல் கள் கூவிக் கொண்டிருந்தன. பறவை கள் 'கிரீச்' 'கிரீச்'சென்று மெல்லிய குரலில் ஓசை ஏற்படுத்திக் கொண்டு இருந்தன.

கிழவன் நேகியை ஆடுகளை அடைக்கும் பட்டிக்கு அழைத்துச் சென்றான். அதிலிருந்து நன்கு கொழுத்த ஓர் ஆட்டை இழுத்து வந்து நேகியிடம் ''இது உன் தாயாருக்குப் பிரியமான ஆடு புல்புல். இதை அவள் நன்கு வளர்த்திருக்கிறாள். இத்துடன் பூடியா என்ற நாயையும்



கொடுக்கிறேன். இவற்றோடு போய் நீ பணம் சம்பாதித்து வா! நீ ஆட்டை விற்கக் கூடாது. கொன்றுஅதன் மாமிசத்தை விற்கவும் கூடாது. இவை என் நிபந்தனை. நீ திரும்பி வரும்போது பணத்தோடு வர வேண்டும்,'' என்றான்.

நேகி அதற்குச் சம்மதித்து ஆட்டைப் பிடித்துக் கொண்டு தன் தந்தையிடமும் தாயிடமும் விடை பெற்றுக் கொண்டான். ஆட்டுடனும் நாயுடனும் மலை மீது ஏறி பள்ளத்தாக்கை கடந்து சென்றான்.

ஆடும் நாயும் ஆடி அசைந்தவாறே அவன்பின் சென்றன. அவனும் வழியில் மரங்களில் இருந்த பழங்களைப் பறித்துத் தின்று ஓடைகளின் நீரை அள்ளிப் பருகி பசியைப் போக்கியவாறே சென்றான். மாலையாகி இருள் சூழவே, அவன் தன் ஆட்டுடனும் நாயுடனும் ஒரு பெரிய தேவதாரு மரத்தடியே படுத்து இளைப்பாறினான்.

அப்போது அவன் தன் தந்தை கூறியது பற்றி யோசித்துப் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. கண்ணை மூடிக் கொண்டு படுக்கவே, விரைவில் அவனுக்குத் தூக்கமும் வந்துவிட்டது.

மறுநாள் காலை அவன் கண் விழித்தபோது நாய் பூடியா மரத்தின் மீதிருந்த ஒரு பூனையைப் பயமுறுத்திக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

பூனையோ நடுநடுங்கிக் கத்திக் கொண்டிருந்தது. நாயோ வாலை ஆட்டியவாறே பயங்கரமாகக் குரைத்துக் கொண்டிருந்தது.

அப்போது அங்கு இரு பெண்கள் அங்கு வந்தார்கள். நேகி ஆச்சரியப்பட்டு அவர்களைப் பார்க்கவே அவர்களும் அவனை விழித்துப் பார்த்தார்கள். அப்போது அவர்களில் இளையவள் மரத்தின் மீதுள்ள பூனையைப் பார்த்து ஓடினாள். நேகி தன் நாயைப் பிடித்து ஒரு புறமாக நிறுத்தவே, அந்தப் பெண் மரத்தின் மீதிருந்த பூனையைப் பிடித்துக் கொண்டாள்.

மூத்தவளோ நேகி பிடித்திருந்த நாயின் தலையைத் தொட்டுப் பார்த்தவாறே ''நாங்கள் இங்கு யாரையும் எதிர்பார்க்கவில்லை. நீ மட்டும் தான் வந்தாயா?'' என்று கேட்டாள்.

அதற்கு நேகி ''நான் மட்டும்

இல்லையே, இந்த ஆடும் நாயும் என்னுடன் இருக்கின்றனவே!'' என்றான். அவன் அந்த இரு பெண்களில் பெரியவளை மிகவும் பிடித்துப் போயிற்று.

அவளும் அவனைப் பார்த்து சிரித்தவாறே ''என் பெயர் ஷமா,'' எனவே, நேகியும் ''என் பெயர் நேகி,'' என்றான். அவன் இளையவளைப் பார்க்கவே, ஷமாவே ''அவள் பெயர் நீரஜா,'' என்றாள்.

அவர்கள் அவனைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு பரோட்டாவும் உருளைக்கிழங்கும் சாப்பிட்டு பாலைக் குடித்தார்கள். அதன்பின் நேகி யோசனையில் ஆழ்ந்தான். அப்போது ஷமா ''என்ன யோசிக்கிறாய்?'' என்று கேட்டாள். நேகி தன் தந்தை சொன்னதை அவளிடம் கூறினான்.

அதைக் கேட்டு அவள் பலமாகச் சிரித்தாள். பிறகு அவள் ''இதில் என்ன சிக்கல்? மிக எளிதாயிற்றே! இந்த ஆட்டின் ரோமத்தைக் கத்தரித்து விற்றால் நிறையப் பணம் கிடைக்குமே! கம்பளி நெய்ய இதைப் பயன்படுத்துகிறார்கள்,'' என்றாள்.

அப்போது நேகி ''அடடா! இது எனக்குத் தெரியாமல் போயிற்றே!'' என்றான். அன்றே அவன் ஆட்டு ரோமத்தைக் கத்தரித்து ஒரு சாக்குப் பையில் போட்டு எடுத்துக் கொண்டு போய் கம்பளி தயாரிப்போருக்கு விற்று நிறையப் பணம் வாங்கிக் கொண்டான்.

அதன்பின் நேகி ஆட்டுடனும் நாயுடனும் தன் ஊருக்குப் போய்ச் சேர்ந்தான். தன் தந்தையிடம் தான் கொண்டு வந்த பணத்தை அவன் கொடுத்தான். அதைக் கண்ட

# கோர்பெட் தேசியப் பூங்கா

இந்தியாவின் முதலாவது தேசியப் பூங்கா ஜிம் கோர்பெட் தேசியப் பூங்கா 500 சதுர கி.மீ. பரப்பளவில் அமைந்துள்ளது.

1935ல் அமைக்கப்பட்ட இப்பூங்கா முதலில் ஹெய்லி தேசியப் பூங்கா எனப்பட்டது. ஹெய்லி அப்போது ஐக்கிய மாகாணங்களின் ஆளுநராக இருந்தவர். 1957ல் இதற்கு ஜிம் கோர்பெட் தேசியப் பூங்கா என்ற பெயர் வைக்கப்பட்டது. ஜிம் கோர்பெட் வேட்டைக்காரரும் பத்திரிகையாளரும் ஆவார்.

இந்தப் பூங்கா பௌரி கட்ஹால், நைனிடால் என்ற இரு மாவட்டங்களுக்கு இடையே உள்ளது. ராம் கங்காவின் கரையில் அமைந்துள்ள இதில் ஒரு செயற்கை அணைக்கட்டும் உள்ளது. இதில் புலிகளோடு யானைகளும், மான்களும், 110க்கும் மேற்பட்ட தாவர வகைகளும் 600 விதப் பறவைகளும் உள்ளன. இதில் முதலாவது புலி பாதுகாப்புத் திட்டம் 1973ல் தொடங்கப்பட்டது.

அவனது தந்தை மகிழ்ந்து போய் ''உனக்கு இவ்வளவு பணம் எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டான்.

நேகியும் ''நீங்கள் கொடுத்த ஆட்டையும் நாயையும் கூட்டிக் கொண்டு கிளம்பினேன். நடந்து களைத்துப் போனதால் நான் அவற்றோடு ஒரு மரத்தடியில் தங்கி இளைப்பாறிக் கொண்டிருந்தேன். அப்போது என்னுடைய நாய் மரத்தின் மீதிருந்த ஒரு பூனையைப் பார்த்து பயங்கரமாகக் குரைத்தது. அதைக் கேட்டு இரு இளம் பெண்கள் அங்கு வந்தார்கள். அவர்களில் பெரியவள் பெயர் ஷமா. சிறியவள் பெயர் நீரஜா. சிறியவள் மரத்தின் மீதேறிப் பூனையைப் பிடித்து எடுத்துக் கொண்டு வந்தாள். நானும் நாயை அடக்கிப் பிடித்துக் கொண்டு நின்றேன்,'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.

''அப்போது பெரியவள் ஷமா என்னைப் பற்றி விசாரிக்கவே நானும் நீ கூறியபடி ஆட்டை விற்காமலும் கொல்லாமலும் பணம் சம்பாதிப்பது எப்படி எனத் தெரியாமல் அதற்கு என்ன வழி என்று யோசித்துக் கொண்டிருப்பதாகச் சொன்னேன்.

அப்போது அவள்தான் ஆட்டு ரோமத்தைக் கத்தரித்து விற்கச் சொன்னாள். நானும் அதைச் செய்து விற்றுப் பணம் பெற்றேன். அவள் இந்த மலைக்கு மறுபுறம் வாழ்கிறாள்,'' என்று கூறினான்.

இவ்வாறு நேகி முழு விவரத்தையும் கூறி ஷமாவைத் தனக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது என்றும் சொன்னான். அதைக் கேட்டு அவனது பெற்றோர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

கிழத் தாய் ''அந்த ஷமா நல்ல புத்திசாலி போலத் தெரிகிறதே! நம் நேகிக்கு அவளை மணம் செய்து வைக்கலாம். நேகி! நீ என்ன சொல்கிறாய்? உனக்கு ஷமாவைப் பிடித்திருக்கிறதா?'' என்று கேட்டாள்.

நேகியும் சிரித்தவாறே ''எனக்கு அவளை மிகவும் பிடித்திருக்கிறது,'' என்று கூறினான். அவனது தாயும் ''சரி. நாளையே உன் தந்தை ஷமாவின் வீட்டாரிடம் பேசி முடிவு செய்யட்டும்,'' என்றாள்.

மறுநாளே நேகியின் தந்தை புறப்பட்டுப் போய் ஷமாவின் வீட்டை அடைந்தான். அங்கு பேச்சு வார்த்தைகள் நடந்து முடிவில் நேகிக்கும் ஷமாவுக்கும் திருமணம் நடந்தது. அத்தம்பதிகள் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

*- சுமங்கல்*





# பிச்சைக்காரனின் பிச்சை

கணபதிக்கு ஏராளமாய் சொத்தும் பணமும் இருந்தபோதிலும் கஞ்சப் பிரபு என்ற பெயர் பெற்றுவிட்டான். பணம் நிறைய இருந்தபோதிலும் அவன் ஏதாவது ஒரு வேலையைச் செய்துகொண்டே பணம் சம்பாதித்துக் கொண்டே இருந்தான். அவனிடம் கஞ்சத்தனம் இருந்தாலும் அவனது அறிவு கூரியதாகவே இருந்தது. எதையும் யோசித்தே செய்வான்.

அவன் திருமணமே செய்து கொள்ளாமல் கொஞ்ச நாட்கள் இருந்தான். ஒருத்தியை மணந்து கொண்டால் வாழ்நாள் முழுவதும் அவளைக் காப்பாற்ற வேண்டுமே என்றும் அதற்காக நிறையப் பணம் செலவாகிவிடுமே என்று பயந்ததே அதற்குக் காரணம்.

வீட்டு வேலைகள், சமையல் முதலியவற்றைச் செய்ய வேலைக்காரியை நியமித்தும் பார்த்தான். அவள் சரியாக வேலை செய்யாததால் அவளை நிறுத்திவிட்டான். மேலும் அவள் எதையாவது திருடிக் கொண்டு போய்விடுவாளோ என்ற பயமும் அவனுக்கு இருந்தது. எனவே திருமணம் செய்து கொள்வதிலேயே லாபம் இருப்பதாக எண்ணி அவன் மணம் செய்து கொள்வது என்ற முடிவிற்கு வந்தான்.

இதை அறிந்த பலர் தம் மகளை அவனுக்குத் திருமணம் செய்து வைக்க முன்வந்தார்கள். கணபதி பணக்காரப் பெண்ணை மணந்து கொள்ள விரும்பவில்லை. ஏனென்றால் அவள் அவன் சொல்கிறபடி நடக்காமல் தன் இஷ்டப்படி நடந்து வருவாள். மேலும் அத்தகைய பணக்காரப் பெண்ணின் திருமணம் ஆடம்பரமாக நடக்கும் என்றும் அந்தச் செலவுக்கு இணையாகத் தானும் பணம் செலவு செய்ய வேண்டி வருமே என்றும் அவன் நினைத்தான்.

- பாபநாசம் சாமா -



எனவே ஏழைப் பெண்ணாகத் தேர்ந் தெடுத்து ஒரு கோயிலில் சிக்கனமாக அவன் தன் திருமணத்தைச் செய்து முடித்துக் கொண்டான்.

கணபதியின் மனைவி பார்வதி அழகானவள். பணக்காரனைத் தான் மணந்து கொண்டதால் தனக்கு அவன் பட்டுப்புடவைகளாயும், தங்க நகைகளாயும் வாங்கிக் கொடுத்து விடுவான் என்று அவள் எதிர்பார்த் தாள். வீட்டில் வேலைக்குப் பல ஆட்கள் இருப்பார்கள் என்றும் எண்ணினாள். ஆனால் அவள் எதிர் பார்த்தபடி எதுவும் நடக்கவில்லை. வீட்டு வேலைகளை எல்லாம் வேறு அவளே செய்ய வேண்டி வந்தது.

பார்வதியால் அவளுடைய தந்தை போட்ட தங்க நகைகளைக் கூட அணிந்து கொள்ள முடியவில்லை. எப்போதும் அணிந்து கொண்டு இருந்தால் தங்கம் தேய்ந்து குறைந்து விடும் என்றும், யார் வீட்டு விசே ஷத்திற்குப் போகும்போது மட்டும் அணிந்து கொள்ள வேண்டும் என்று கூறி கணபதி அவற்றை எடுத்துத் தன் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டான். புடவை விஷயத் திலும் அதுவே தான். முரட்டு நூல் புடவைகளைத் தான் அவள் கட்டிக் கொள்ள வேண்டி வந்தது.

இப்படி எல்லாம் இருந்தாலும் கணபதி அவளைப் புகழ்ந்துக கொண்டே இருந்தான். நகைகள் அணியாமலும், பட்டுப்புடவை கட் டாமலும் இருந்தால் கூட அவள் தேவலோகக் கன்னிகை போல இருப்பதாகக் கூறி அவள் மனதைக் குளிர வைத்து வீட்டு வேலைகளைச் செய்வித்தான். இவ்வளவு இருந்தும் சாப்பாடு விஷயத்திலும் கணபதி கஞ்சத்தனத்தையே காட்டி வந்தான்.

சோளம், கம்பு, ராகி என்பன வற்றைச் சமைக்கச் சொல்லி ஏதாவது ஒரு கீரையை மசித்துப் போடும்படி அவன் பார்வதியிடம் கூறினான். அது உடம்பிற்கு நல்லது என்றும் அந்த உணவை உண்டால் வைத்தியரிடம் போக வேண்டி வராது என்றும் அவன் கூறி வந்தான். என்ன செய் வாள் பாவம் பார்வதி! விதியே என்று தன் கணவன் கூறியதைச் சமைத்து வேண்டாவெறுப்பாக அதை அவ ளும் உண்டு வந்தாள்.

இந்நிலையில் எந்த தேவதை யாவது வந்து தன் கணவனின் மனதை மாற்றக் கூடாதா என்று பார்வதி ஏங்கி

வேண்டலானாள். ஒருநாள் கணபதி ஏதோ ஒரு வேலையாகப் போய் விட்டு உச்சிவேளைக்குத் தன் வீட்டிற்கு வந்தான். அவனுக்கு ஒரே பசி. பார்வதியைக் கூப்பிட்டு சாப்பாடு போடுமாறு கூறினான். அவளும் ஏதோ யோசித்தவாறே பரிமாறினாள்.

அப்போது கணபதி ''என்ன யோசனை?'' என்று கேட்டான். அவளும் ''நேற்றிரவு ஓர் அதிசயக் கனவு கண்டேன். அதில் பார்வதி தேவி தோன்றி 'நாளை நீ ஒரு பிச்சைக்காரனுக்கு சாப்பாடு போட்டால் உள் கணவனுக்குப் பணமாக வந்து குவியும்,' என்றாள். அதனால் இன்று நான் சாப்பிடாமல் இருந்து அந்த என் சாப்பாட்டை ஒரு பிச்சைக்காரனுக்குப் போடலாம். நீங்கள் என் சாப்பாட்டை யாராவது ஒரு பிச்சைக் காரனுக்குப் போட்டுவிட்டு வாருங்கள்!'' என்றாள்.

கணபதியும் தன் மனைவியைப் புகழ்ந்தவாறே அவள் கொடுத்த சாப்பாட்டை எடுத்துக் கொண்டு பிச்சைக்காரனைத் தேடிக் கொண்டு சென்றான்.

ஓரிடத்தில் அடர்ந்த செடிகளுக்கிடையே இருந்து யாரோ முக்கி முனகுவது அவன் காதில் விழுந்தது. அங்கு போய்ப் பார்த்த போது உடல் ஒட்டிய பிச்சைக்காரன் ஒருவனை அவன் கண்டான். அவனைப் பற்றி ஊரார் பேசி வந்ததை கணபதி கேட்டிருந்தான். அவன் ஒருநாளில் ஒரு வேளை தான் சாப்பிடுவானாம். அதுவும் ஒரு வீட்டில் கேட்டு வாங்கும்



சாப்பாடு மட்டும் தானாம். யாராவது காசு கொடுக்க வந்தால் அதை வாங்கிக் கொள்ளமாட்டானாம். அதனால் அவன் எந்த வீட்டின் முன் நின்றாலும் அந்த வீட்டுக்காரன் உடனே சாப்பாட்டைப் போட்டுவிடுவான். அவன் அதைச் சாப்பிட்டால் அந்த வீட்டுக்காரனுக்கு நல்லதே நடக்கும் என்று அவ்வூரார் நம்பினார்கள். அப்பிச்சைக்காரன் அதுவரை கணபதியின் வீட்டின்முன் நின்று பிச்சை கேட்டதே இல்லை.

அன்று அப்பிச்சைக்காரனின் மேல்துண்டு வேகமாக வீசிய காற்றில் பறந்து செல்லவே, அவன் அதைப் பிடிக்க ஓடிக் கீழே விழுந்தான். அப்போது அவன் கால் சுளுக்கிக் கொண்டது. அதனால் வலி பொறுக்க முடியாமல் அவன் முனகிக்



கொண்டு கிடந்தான். அப்போதுதான் கணபதி அங்கு வந்தான்.

அவனைக் கண்டதும் அந்தப் பிச்சைக்காரன் ''பசியாய் இருக்கிறது. ஏதாவதுசாப்பிட இருந்தால் அதைச் சாப்பிட்டுவிட்டு மெதுவாக எழுந்து எப்படியாவது நடந்து போகிறேன்,'' என்றான். கணபதியும் பிச்சைக்காரன் கிடைத்தானே என்று மகிழ்ந்து தான் கொண்டு வந்த சாப்பாட்டை அவனிடம் கொடுத்தான். அந்த பிச்சைக்காரன் அதை வாங்கி ஒரு வாய் போட்டுக் கொண்டதும் ''இது சாப்பாடா? இதையா நீ சாப்பிடுகிறாய்? ஒரே யடியாகக் கசக்கிறதே!'' என்றான்.

கணபதியோ, ''இது உடல்நலனைப் பாதுகாக்கும் உணவு. இப்படி இதைத் தயாரிக்க நானே என் மனைவிக்குச் சொல்லிக் கொடுக்கிறேன். இதைத் தயாரிக்க செலவும் குறைவு. உடம்பிற்கும் நல்லது,'' என்றான்.

அந்தப் பிச்சைக்காரனும் ''இது வரை நான் இந்த மாதிரி சாப்பாட்டை சாப்பிட்டதே இல்லை. இப்படிப் பட்ட உணவையா நீங்கள் தினமும் உண்கிறீர்கள்?'' என்று கேட்டான். ''ஆமாம்!'' என்று கணபதி கூறவே, கொடுத்த சாப்பாட்டை எறியக் கூடாது என்று மிகவும் சிரமப்பட்டு ஒருவாறாகச் சாப்பிட்டு முடித்தான். அதன்பின் அவன் மெதுவாக நொண்டியவாறே அங்கிருந்து சென்றான்.

மறுநாள் கணபதி சாப்பிட உட்கார்ந்தபோது பார்வதி ருசியான பதார்த்தங்களைப் பரிமாறினாள். அதைக் கண்ட கணபதி அலறி ''இதை நீ எப்படிச் செய்தாய்? இதற்கான சாமான்கள் எங்கே கிடைத்தன? உன் பிறந்த வீட்டிலிருந்து அனுப்பினார்களா?'' என்று கேட்டான்.

அவளும் ''அதெல்லாம் ஒன்றும் இல்லை. உடல் ஒட்டிய பிச்சைக்

காரன் இவற்றை நம் வீட்டு வாசலில் நான் வேண்டாம் என்று கூறியும் வைத்துவிட்டுப் போனான். ஒரு வேளை ஒரு தேவதை தான் இவற்றை அவன் வாயிலாக அனுப்பி வைத்திருக்குமோ!'' என்றாள்.

அதுகேட்டு கணபதி பிச்சைக்காரன் வேறு யாருக்காவது உணவு கொடுத்தானா என்று விசாரிக்க வெளியே சென்றான். அப்போது பலர் ''அந்தப் பிச்சைக்காரன் அதிசயமாக இன்று பல வீடுகளின் முன் நின்று சாப்பாடு வாங்கிக் கொண்டதோடு, காசு கொடுத்தாலும் அதையும் ஏற்றுக் கொண்டு போனான்,'' என்றார்கள். இதுவரை இல்லாமல் திடீரென பிச்சைக்காரன் ஏன் இப்படி மாறினான் என்பதை அறிய கணபதி அவனைத் தேடிச் சென்றான்.

ஊர் எல்லையில் அந்தப் பிச்சைக்காரன் ஒரு புளிய மரத்தின் கீழ் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவனருகே போய் ''ஏன் இந்த மாற்றம்?'' என்று கேட்டான். அவனும் ''நான் மிகவும் பசியுடன் இருந்தபோது எனக்கு உணவு கொடுத்தீர்கள். அதற்கு உங்களுக்கு கடன் பட்டவன். ஆனால் நீங்கள் சாப்பிடும் உணவைக் கண்டு உங்கள் மீது பரிதாபம் ஏற்பட்டது. எனவே பல வீடுகளில் பிச்சை எடுத்து அதனால் தின்பண்டங்களை வாங்கி உங்கள் மனைவியிடம் கொடுத்தேன். இனி தினமும் இவ்வாறே செய்வேன். நீங்களும் தினமும் ருசியான உணவை உண்ணலாம்,'' என்றான்.

அதைக் கேட்டு கணபதி திகைத்துப் போனான். பிச்சைக்காரனுக்கு ஒருவேளை சாப்பாடு போட்டதற்கு அவன் அதற்கு நன்றிக் கடனாக விருந்து சாப்பாடே போட்டான். பிச்சை எடுத்துத் தர்மம் செய்கிறான்! ஆனால் பணமும் சொத்தும் நிறைய இருந்தும், தானும் நன்கு உண்டு உடுத்தாமல் தன் மனைவியையும் அவ்வாறே இருக்கச் செய்தது தவறு என்பது அவனுக்குத் தெரிந்தது.

அப்போதே அவன் கஞ்சத்தனம் ஒழிந்து மனம் மாறினான். பிச்சைக்காரனும் முன்போல ஒரு வீட்டில் இருந்து மட்டும் பிச்சை பெற்றான். கணபதி வீட்டிலும் அவனுக்குப் பிச்சை கிடைத்தது.





# விழுந்து வணங்கும் வரதன்

வரதன் என்பவனுக்கு ஜமீன்தாரர் அலுவலகத்தில் சேவகன் வேலை கிடைத்தது. அந்த வேலையை அவனுக்கு வாங்கிக் கொடுத்த குருசாமி ''வரதா! நீ எப்போதும் ஜமீன்தாரருக்குமரியாதை காட்ட வேண்டும். அவரைக் காணும்போதெல்லாம் விழுந்து வணங்க வேண்டும். இதை மட்டும் மறந்துவிடாதே!'' என்று கூறி இருந்தான். இதை வரதன் நன்கு நினைவில் வைத்துக் கொண்டான்.

வேலையில் சேர்ந்த முதல் நாள் அவன் ஜமீன்தாரரைப் பார்த்ததும் உடனே விழுந்து வணங்கினான். அதுகண்டு அவர் மிகவும் மகிழ்ந்து போனார்.

பிறகு அவர் அங்கு இருந்தவர்களுடன் பேசிவிட்டு மறுபடியும் வரதனைப் பார்த்தார். அப்போதும் அவன் அவரை விழுந்து வணங்கினான். ஜமீன்தாரரும் அவனது பணிவைக் கண்டு சந்தோஷப்பட்டு அவனிடம் வேறொரு வேலையைச் செய்துவிட்டு வரும்படிக் கூறினார். அவனும் அந்த வேலையைச் செய்து முடித்துவிட்டு வந்து ஜமீன்தாரரைக் கண்டு மீண்டும் விழுந்து வணங்கினான்.

இதுபோல அவன் ஜமீன்தாரரைக் கண்டபோதெல்லாம் விழுந்து வணங்கலானான். ஜமீன்தாரரை வரதன் ஒருநாளில் பலமுறை பார்த்தாலும் ஒவ்வொரு முறையிலும் விழுந்து வணங்கினான். இதனால் சந்தோஷப்பட்டு ஜமீன்தாரர் அவனைத் தன் மெய்க்காவலாளியாக நியமித்தார். அவன் எப்போதும் பின்னாலேயே இருந்தபோதிலும் அவர் அவனிடம் ஏதாவது சொல்லத் திரும்பும்போது அவன் அவரை விழுந்து வணங்கி வந்தான்.

ஒருமுறை ஜமீன்தாரருக்குக் கழுத்து வலி ஏற்பட்டது. அந்த வலி போகத் தலையை அப்படியும்

- சங்கர சிவகுமார் -

இப்படியுமாக தினமும் சிறிது நேரத் திற்குப் பலதடவைகள் திருப்பும்படி வைத்தியர் கூறினார். அவர் பக்கத் திலேயே நின்ற வரதன் அவரது தலை திரும்பித் தன்னைப் பார்க்கும் போதெல்லாம் அவரை விழுந்து வணங்கினான்.

வரதன் இவ்வாறு செய்து வருவது அந்த அலுவலகத்தில் வேலை செய்யும் எல்லோருக்கும் தெரிந்து போயிற்று. ஆனால் யாரும் அவ னைக் கேலியோ அல்லது கிண்டலோ செய்யவில்லை. ஏனெனில் வரதன் வணங்குவது ஜமீன்தாரரை. அதைச் செய்யாதே என்று அவர்கள் அவ னிடம் எப்படிக் கூற முடியும்?

ஒருநாள் ஜமீன்தாரர் ஊருக்கு வெளியே உள்ள ஒரு வயலைக் காணச் சென்றார். வரதனும் அவர் பின்னால் சென்றான்.

அப்போது ஒரு திருடன் வரதனின் காலைத் தட்டிக் கீழே விழச் செய்துவிட்டு மின்னல் வேகத்தில் பாய்ந்து ஜமீன்தாரர் அணிந்திருந்த தங்கச் சங்கிலியை அறுத்து எடுத்துக் கொண்டு ஓடிவிட்டான்.

ஜமீன்தாரர் திரும்பிப் பார்த்த போது வரதன் அவரை விழுந்து வணங்கினான். அவனால் எழுந் திருக்க முடியவில்லை என்று ஜமீன் தாரர் எண்ணி அவரே ஓடி திரு டனைத் துரத்தியவாறே ''வரதா! எழுந்து ஓடி வா! திருடனைப் பிடி!'' என்று கத்தினார்.

அந்தக் குரலைக் கேட்டு வரதன் எழுந்து நின்றான். பிறகு திருடனைத்



துரத்திப் பிடிக்கப் போகையில் ஜமீன்தாரர் அங்கு வந்துவிட்டார். அவரைக் கண்டதும் வரதன் திரு டனைப் பிடிப்பதைவிட்டு ஜமீன் தாரர் முன் விழுந்து வணங்கினான்.

அவ்வளவு தான். திருடன் ஓடியே போய்விட்டான். ஜமீன்தாரரின் கோபம் கட்டுக்கு அடங்காமல் போயிற்று. ''கைக்குக் கிடைக்க இருந்த திருடனை இப்படி விட்டு விட்டாயே!'' என்று அவர் திட்டி நொறுக்கினார்.

அப்போது வரதன் ''ஐயா! தங்களைக் கண்டதும் விழுந்து வணங்குகிறேன். இது எனக்குப் பழக்கமாகிவிட்டது. அதன்படி வணங்கியதால் திருடன் தப்பி ஓட முடிந்தது. இனி மேல் நான் உங் களை விழுந்து வணங்கக் கூடாது என்று நீங்கள் சொன்னால் அதை



நிறுத்திவிடுவேன்,'' என்றான். அப்போது ஜமீன்தாரர் ''அது கிடக்கட்டும். இப்போது என் விலையுயர்ந்த தங்கச் சங்கிலி போய் விட்டதே! திருடனை எப்படிப் பிடிப்பது?'' என்றார்.

வரதனும் ''எனக்கு அந்தத் திருடனின் அங்க அடையாளங்கள் நினைவில் உள்ளன. எனவே இதை அறிவிப்பதோடு திருடன் தானாகவே வந்து சங்கிலியைக் கொடுத்துவிட்டால் மன்னிக்கப்படுவான் என்றும் அப்படிச் செய்யாவிட்டால் அவனைப் பிடித்து எல்லோர் முன்பும் கடுமையான தண்டனை கொடுக்கப்படும் என்று பறைசாற்றுங்கள்,'' என்றான். ஜமீன்தாரரும் அவ்வாறே அறிவித்தார்.

மறுநாளே அவரது கட்டிலுக்கு பக்கத்தில் திருடு போன அவரது தங்கச் சங்கிலி வைக்கப்பட்டிருந்தது.

ஜமீன்தாரரும் அதைக் கையில் எடுத்துக் கொண்டு வரதனிடம் ''தங்கச் சங்கிலி கிடைத்தது சரியே. ஆனால் அந்தத் திருடனுக்கும் என்னிடம் வேலைசெய்யும் யாரோ ஒருவனுக்கும் தொடர்பு உள்ளது. நீஅவனைக் கண்டுபிடித்து எனக்குக் காட்ட வேண்டும்,'' என்றார்.

அதுகேட்டு வரதன் ஆடிப்போய் ''ஐயா! உண்மையிலேயே எனக்கு அந்தத் திருடனின் அங்க அடையாளங்கள் என்ன என்று தெரியாது. என் வணக்கத்தால் தங்கள் தங்கச் சங்கிலி போயிற்றே என எண்ணி அப்படிச் சொன்னேன். திருடன் தண்டனைக்குப் பயப்பட்டு சங்கிலியைக் கொண்டு வந்து வைத்து விட்டான்,'' என்றான்.

ஜமீன்தாரரும் ''பேஷ்! பேஷ்!! உனக்கு இவ்வளவு மூளை இருக்கிறதா! ரொம்ப சந்தோஷம். இதற்காக இன்று இனிப்புப் பண்டங்களைத் தின்னவேண்டும். நீ சமையல் கட்டிற்குப் போய் சமையல்காரனிடம் அவற்றைத் தயாரிக்கும்படிச் சொல்!'' என்றார்.

வரதனும் சமையல்கட்டிற்குப் போய் சமையல்காரனிடம் ஜமீன்தாரரின் கட்டளையைத் தெரிவித்தான். சமையல்காரனும் அப்பம் செய்து அதில் ஒன்றை வரதனிடம் கொடுத்து ''எப்படி இருக்கிறது என்று ருசி பார்!'' என்றான்.

வரதனும் அதைத் தின்றுவிட்டு

''ஆகா! பிரமாதம்!!'' என்று கூறவே, சமையல்காரன் இன்னொரு அப்பத்தைக் கொடுத்தான். அதைத் தின்று விட்டு அவன் ஜமீன்தாரரைக் கண்டான். அவர் அவனை சமையல் கட்டிற்கு அனுப்பினார். அப்போதும் சமையல்காரன் ஓர் அப்பத்தை அவனுக்குக் கொடுத்தான்.

ஏனோ அன்று ஜமீன்தாரர் பல முறை சமையல்கட்டிற்கு வரதனை அனுப்பிக் கொண்டே இருந்தார். ஒவ்வொரு முறையும் சமையல்காரன் ஓர் அப்பம் வீதம் அவனுக்குக் கொடுத்துக் கொண்டே இருந்தான். அவனால் மேலும் ஓர் அப்பம் கூடத் தின்ன முடியவில்லை என்ற நிலை ஏற்பட்டபோது அவன் ''இனி வேண்டாம்,'' என்றான்.

சமையல்காரனோ, ''நீ தின்றே யாக வேண்டும். இது ஜமீன்தாரரின் கட்டளை,'' என்றான். வரதன் ஜமீன்தாரரிடம் போய் சமையல்காரனின் செயலைக் கூறினான்.

அவரும் ''உனக்கு அப்பம் என்றால் மிகவும் பிடிக்குமே. எனவே, உனக்கு அதை மட்டும் கொடுத்துக் கொண்டே இருக்கும்படிக் கட்டளை இட்டேன்,'' என்றார்.

வரதனும் ''எதற்கும் ஓர் அளவு என்று இருக்கிறது தானே! அளவுக்கு மீறினால் அமிர்தமும் விஷம் என்றே அறிஞர்கள் கூறி இருக்கிறார்களே! எனவே, அளவுக்கு மீறி அப்பம் என்னால் தின்ன முடியவில்லை,'' என்றான்.

ஜமீன்தாரரும் ''பேஷ். சரியாகச் சொன்னாய். நீ அளவுக்கு மீறித்தானே என்னை விழுந்து வணங்குகிறாய்? பிறர் என்னை வணங்கினால் எனக்கு மகிழ்ச்சியே. உனக்குப் பிடித்த அப்பம் அளவிற்கும் மீறி தின்ன முடியாதது போல எனக்குப் பிரியமான 'பிறர் என்னை வணங்குவதும் அளவை மீறக் கூடாது. தெரிந்ததா?'' என்றார்.

வரதன் ஜமீன்தாரர் சொன்னதைப் புரிந்துகொண்டு அன்று முதல் ஜமீன்தாரரை ஒருநாளில் முதல் முறையில் பார்க்கும்போது மட்டும் வணக்கம் செலுத்தி வரலானான்.



# நம் இந்தியா

1. இது நம் நாட்டு மாநிலம் ஒன்றின் வரைபடம். இதை அச்சடிக்கும்போது வட, தென் திசைகள் மாறிவிட்டன. இந்த மாநிலத்தின் பெயர் என்ன? இதன் தலைநகர் எது?



2. இப்போது நம் நாட்டில் மிகப் பெரிய மாநிலம் எது?
   - a) உத்திரப் பிரதேசம்
   - b) மத்தியப் பிரதேசம்
   - c) ராஜஸ்தான்
   - d) ஆந்திரப் பிரதேசம்
3. நம் நாட்டின் தலைநகர் கல்கத்தா விலிருந்து டில்லிக்கு மாற்றப் பட்டபோது யார் வைஸ்ராயாக இருந்தார்?
   - a) லார்ட் கர்ஸன்
   - b) லார்ட் ஹார்டிஞ்ச்
   - c) லார்ட் வேவல்
   - d) லார்ட் டெல்ஹௌசி
4. சிப்கோ இயக்கத்தை ஆரம்பித் தவர் யார்?
   - a) மேனகா காந்தி
   - b) அருந்ததி ராய்
   - c) மேதா பட்கர்
   - d) சுந்தர்லால் பகுகுணா
5. ஹைதராபாத் ஆந்திரப் பிரதேசத் தின் தலைநகராவதற்கு முன் அதன் தலைநகராக இருந்தது எது?
   - a) நெல்லூர்
   - b) கர்நூல்
   - c) விஜயவாடா
   - d) விசாகபட்டணம்
6. ஜாலியன்வாலாபாக் படுகொலை யால் மனம் வெதும்பி கவியரசர் ரவீந்திரநாத் தாகூர் ஆங்கில அரசு அளித்த பட்டத்தைத் திருப்பி அனுப்பினார். இது நடந்தது எந்த ஆண்டில்?
   - a) 1919 b) 1922
   - c) 1924 d) 1927

*(விடைகள் அடுத்த மாதம்)*

## செப்டம்பர் மாத வினாக்களின் விடைகள்

1. c - i, a - ii, b - iii
2. வழக்கறிஞர்
3. கேலிச் சித்திரக்காரர் சங்கர்
4. சோவியத் ரஷ்யா
5. 49 ஆண்டுகள்
6. செய்தி, தகவல் துறை அமைச்சர்
7. வங்கிகளை நாட்டுடமை ஆக்கியது
8. 1980



# விநாயகர்

ஔவையார் ஒருநாள் பழங்கள் நிறைந்த மரங்கள் கொண்ட வழியே சென்று கொண்டிருந்தார். அப்போது அழகிய சிறுவன் ஒருவன் ஒரு மரத்தின் மீது அமர்ந்து பாடுவது அவருக்குக் கேட்டது. அம்மரத்தில் பழுத்த பழங்கள் ஏராளமாகத் தொங்கிக் கொண்டிருந்தன

அவர் அச்சிறுவனிடம் ''பையா! ஒரு பழம் பறித்து எனக்குப் போடு கிறாயா?'' என்று கேட்டார். சிறு வனும் சிரித்தவாறே ''பாட்டி! எந்த மாதிரிப் பழம் வேண்டும்? உன் முதுமையைப் போக்கும் பழமா? மரணத்தை வெல்லும் பழமா? செல்வத்தைக் கொடுக்கும் பழமா? ஞானப் பழமா?'' என்று கேட்டான்.

அப்போது ஔவையாருக்கு அந் தச் சிறுவன் முருகக் கடவுளே என்று தெரிந்துவிட்டது. அவர் அவனைக் கைகூப்பி வணங்கி ''முருகா! ஞான பண்டிதா! எனக்கு ஞானப் பழத் தையே அளி!'' என வேண்டினார்.

சிறுவன் மறுவிநாடியே குமரக் கடவுளாக மாறினான். மயில் வாக னத்தோடு காட்சியளித்த கந்தனை ஔவை வணங்க முருகபிரானும் தம் கையால் அவரது தலையைத் தொட் டார். அப்போது ஔவைக்கு ஓங் காரப் பிரணவத்தின் தத்துவமும் பிரம்மஞானமும் முக்திக்கான மார்க்க மும் தெளிவாகத் தெரிந்தது.

முருகபிரான் தம் ஆசிகளை அவ ருக்கு அளித்துவிட்டு உடனேயே மறைந்தார். ஔவையார் தான் அடைந்த இன்பத்தை இந்த வைய மும் பெற வேண்டும் என எண்ணி னார். எனவே தம் அறிவுரைகளை



ஆத்திச்சூடி, மூதுரை போன்ற செய் யுள்களாகக் கூறினார். அவர் கூறிய எளிய சொற்கள் எல்லோருக்கும் புரிந்தன. அவை என்றென்றும் நிலைத்தும் விட்டன.

ஔவையார் ஊர்ஊராகச் சென் றார். ஒருநாள் இருட்டும் வேளைக்கு ஒரு காட்டு வழியே சென்று கொண் டிருந்தார். வானத்தில் கருமேகங்கள் சூழ, மின்னல் அவ்வப்போது வெட் டிக் கொண்டிருந்தது. மழை வேறு பெய்ய ஆரம்பித்தது. ஔவையார் கால் இடறிக் கீழே விழுந்துவிட்டார். அவரது ஊன்றுகோல் அவர் விழுந்த இடத்திலிருந்து சற்று தூரத்தில் போய் விழுந்தது.

அப்போது யாரோ நடந்து வரும் காலடி சத்தம் அவருக்குக் கேட்டது. அவர் மின்னல் வெளிச்சம் ஆன போது தலை நிமிர்ந்து பார்த்தார். அழகாய், பருமனாய் தொந்தியும் தொப்பையுமாக உள்ள ஒரு சிறு வனை அவர் கண்டார். அவன் ஔவையாரைக் கை பிடித்துத் தூக்கி நிறுத்தி அவரது ஊன்றுகோலையும் எடுத்துக் கொடுத்தான்.

ஔவையார் ஊன்றுகோலின் உதவியால் நின்று அந்தச் சிறுவனைப் பலமாகப் பற்றிக் கொண்டார். அவ னும் ''பாட்டி! நீ எங்கே போகிறாய்?'' என்று கேட்டான். ஔவையும் ''எங்கே என்று சொல்வது? இந்த உலகில் எல்லா ஊரும் என் ஊர் தான். ஆனால் நான் அடைய விரும்பும் ஊர் இந்த உலகில் இல்லை. அதற்கு என்ன வழி என்றுதான் தேடிக் கொண்டிருக்கிறேன். ஆமாம், நீ யார்? ஜன நடமாட்டம் இல்லாத இந்தக் காட்டில் இருட்டில் வந் திருக்கிறாயே!'' என்று கேட்டார்.

அவனும் ''ஔவையே! நான் உன் சிறுவயதிலிருந்து உன் நண்பனாக இருந்து வருகிறேன். காடு, இருட்டு என்றெல்லாம் கவலைப்படாதவன். நீ ஏதோ ஊருக்குப் போய்ச் சேர வேண்டும் என்றாயே, அதன் பெய ரைச் சொல்லவில்லையே!'' என்று கேட்டான். ஔவையாரும் ''உன் னிடம் சொன்னால் என்னை அங்கே அழைத்துச் செல்லவா போகிறாய்? அதுதான் சிவனாரின் இருப்பிட மாகிய கைலாசம்,'' என்றார்.

அதுகேட்டு சிறுவனும் ''பூ! இதுதானா? உன் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அங்கே போகி றேன்,'' என்று கூறி ஔவையாரின்

கையைப் பிடித்துக் கொண்டு நடக்க லானான். ஔவையார் இரண்டடி எடுத்து வைத்ததுமே 'பளிச்'சென மின்னல் மின்னியது. அப்போது துதிக்கையால் விநாயகர் தன்னைப் பிடித்து நடத்திக் கொண்டு போவதை அவர் கண்டார். உடனே அவர் ''விநா யகா! எனக்கு சிறுவயது முதல் நீதான் வழிகாட்டி!'' எனக் கூறித் துதித்தார். விநாயகரோ அவரைப் படிப்படியாக ஏற வைத்து முடிவில் ''ஔவையே! இதோ கைலாசத்தை அடைந்து விட்டாய்!'' என்றார். ஔவையாரும் கண்ணைத் திறந்து பார்த்தார்.

ஒரே ஒளிமயமான இடம் அது. அதன் கீழே வெகுதூரத்தில் பல நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருந் தன. பல சூரியர்களும், வால் நட்சத் திரங்களும், வாயு உருவில் சுற்றி வந்து எரியும் ஜோதிகளும் தெரிந்தன.

விநாயகர் ஔவையின் கைகளை விட்டுவிட்டு ''ஔவையே! நீ கைலா சம் வந்துவிட்டாய். இங்கு காலம் என்பதும் அழிவு என்பதும் இல்லை. இது சிருஷ்டிக்கு அப்பாற்பட்ட சிவசன்னிதானம். அகிலாண்டகோடி நாயகரான சிவனாரை நீ எப்போதும் தரிசித்துக் கொண்டே இருக்கலாம்,'' எனக் கூறி மறைந்தார்.

ஔவையார் லிங்க வடிவில் எங்கும் பரவியுள்ள ஜோதி வடிவைக் கண்டார். அதில் சிவகணங்களும், நந்திதேவரும், பார்வதி தேவியும், குமரக் கடவுளும், விநாயகரும், சிவ னாரும் இருப்பதை அவர் கண்டு களித்தார். சிவனாரும் தன் அபயக்



கரம் அளித்து ஔவையாரைத் தன் ஜோதியில் சேர்த்துக் கொண்டார்.

மண்டபத்தில் கரும்பை பற்றிய விநாயகரை ஒரு குடியானவன் கண்டு கொண்டிருக்கும் சிறப்பத்தைப் பார்த்து பாவனமிசிரர் அதை விவரிக்கும் கதையைக் கூறலானார்.

மிகப்பெரிய பண்ணையார் ஒரு வர் விநாயக பக்தர். அவர் விநாயகருக் குப் பூஜை, திருவிழா எனப் பிரமாதமாகக் கொண்டாடி வந்தார். அவருக்குப் பல நெல் வயல்களும் கரும்புத் தோட்டங்களும் இருந்தன. இந்த வயல்களின் விளைச்சல்களை அமோகமாக்கிக் கொண்டிருந்தவன் அவரிடம் வேலை செய்த முனியன் என்பவன். அவன் பண்ணையாரைப் போல ஆர்ப்பாட்டத்துடன் விநாய கரை வழிபடாவிட்டாலும் மன திலேயே தியானித்து வந்தான். வருடாவருடம் பயிர் செய்யும்போது



விநாயகரைத் தொழுத பிறகே வயலில் வேலை செய்ய இறங்குவான்.

முனியனுக்கு மனைவியும், மகன் ஒருவனும் இருந்தனர். அவர்கள் இருவரும் வயல்களில் முனியனுக்கு உதவியாக வேலை செய்து வந்தார்கள். ஆனால் அவர்களுக்குப் பண்ணையார் குறைந்த கூலியே கொடுத்து வந்தார். பண்ணையாரின் மனைவியோ தாராளமனம் படைத்தவள். அவள் தன் கணவரிடம் முனியனுக்கும் அவன் குடும்பத்தவருக்கும் கொடுக்கும் கூலி மிகக் குறைவு என்றும் அது அநியாயம் என்றும் கூறிப் பார்த்தாள்.

அவரோ, ''இப்படி பணத்தை அள்ளிக் கொடுத்துவிட்டால் விநாயகருக்குப் பூஜையும் விழாவும் எப்படி செய்ய முடியும்? இந்த மாதிரி மீதம் பிடித்துத்தான் இந்தப் பூஜை எல்லாம் செய்ய முடியும்,'' என்றார்.

அதற்கு அவர் மனைவி ''இப்படி ஏழைகளின் வயிற்றில் அடித்த காசில் பூஜை ஏன் செய்ய வேண்டும்?'' எனக் கூறி ''விநாயகா! நீதான் இவருக்கு நல்ல புத்தி கொடுக்க வேண்டும்,'' என்று வேண்டிக் கொள்வாள்.

அந்த வருடம் கரும்பு நன்கு விளைந்தது. முனியனும் அவனது குடும்பத்தினரும் கரும்பை வெட்டி சாளையில் கொண்டுபோய் போட்டனர். முனியனின் மகன் ஆசையாக ஒரு கரும்பை எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குக் கிளம்பினான்.

இந்தச் சிறுவனும் விநாயக பக்தனே. பண்ணையார் நடத்தும் பூஜைகளுக்கும் விழாக்களுக்கும் பக்தி சிரத்தையுடன் மலர்களைச் சேகரித்துக் கொண்டு வருவான். அவன் ஒரு கரும்போடு செல்வதைப் பண்ணையார் கவனித்துவிட்டார். அவனைக் கூப்பிட்டு அவர் ''இதென்னடா கொள்ளை? இப்படித்தான் தினமும் கொண்டு போகிறாயா?'' என்று அதட்டிக் கேட்டார்.

அச்சிறுவனும் ''இல்லை. நாளை விநாயக சதுர்த்தி. எங்கள் வீட்டிலும் விநாயகரை வைத்துப் பூசிக்கலாம் என்று இதை எடுத்துச் செல்கிறேன்,'' என்று பணிவுடன் சொன்னான்.

அதுகேட்டு அவர் ''டேய், என்ன திமிர் உனக்கு? உயர் குலத்தவராக நாங்கள் பூஜை செய்வதுபோல நீயும் பூஜை செய்ய ஆசைப்படுகிறாயா?'' என்று கூறி அவனைச் சாட்டையால் சுளீர்சுளீரெனப் பல அடிகள் அடித்துவிட்டார். அவரது செயலை யாரும்

தடுக்க முன்வரவில்லை. ஏனெனில் அவரது பணபலம் மற்ற வேலைக் காரர்களை ஊமையாக்கிவிட்டது.

முனியனோ தன் மகன் அடி தாங்க முடியாமல் துடிப்பது கண்டு ''ஐயா! கடவுளைத் தொழ குலம், மதம் என்றெல்லாம் வேறுபாடு இல்லையே. எல்லோருக்கும் கடவுளிடம் பக்தி கொண்டு பூஜை செய்ய உரிமை உண்டல்லவா?'' என்று பண்ணையாரிடம் பணிவோடு கூறினான்.

அதைக் கேட்ட பண்ணையார் எரிந்து விழுந்து ''உன் லட்சணத்திற்கு பக்தி ஒரு கேடா? நீ பெரிய பக்தனோ? என்னைவிட விநாயக பக்தியில் உயர்ந்தவனோ?'' என்று சவால் விட்டார். முனியனும் ''உங்களை விட அதிக பக்தி உள்ளவன் என்பது எல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் நானும் என் குடும்பத்தவரும் விநாயக பக்தி பூண்டவர்கள்,'' என்றான்.

அப்போது பண்ணையார் ஏளனமாக ''அடே பக்தனே! இன்று இரவிற்குள் இந்தக் கரும்புகள் எல்லாவற்றையும் சாப்பிட்டு அதன் சக்கையைத் துப்பிக் குவித்துவிட வேண்டும். அப்போதுதான் உன் பக்தி உண்மையானது என நான் நம்புவேன். இப்படிச் செய்யாவிட்டால் உனக்கு நூறு கசையடி கொடுப்பேன்,'' எனக் கூறிவிட்டு



அவனை அந்த சாளையிலேயே இருக்கச் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

முனியனுக்கும் அவ்வளவு கரும்பையும் எப்படி ஒரே இரவில் சாப்பிடுவது எனத் தெரியவில்லை. அவன் விநாயகரை தியானம் செய்தவாறே அந்த சாளையிலேயே படுத்துத் தூங்கிவிட்டான்.

விடிந்ததும் பண்ணையார் முனியன் இருந்த சாளைக்கு வந்தார். அங்கு அவர் ஓரிடத்தில் கரும்புச் சக்கை மலையாகக் குவிந்து கிடப்பதையும் ஒரு கரும்புகூட மீதம் இல்லாமல் இருப்பதையும் கண்டு திகைத்துப் போய் ஆவென கத்தினார்.

அப்போது அவர் தன்னோடு வந்த தன் மனைவியிடம் ''ஐயோ! இந்த வருடக் கரும்புப் பயிர் எல்லாம் இப்படிப் பாழாகிவிட்டதே! ஒரு கரும்புத் துண்டு கூட இல்லையே இவ்வளவையும் சாப்பிட்ட இந்த முனியன் மனிதன்தானா அல்லது பூதமா?'' என்று ஆத்திரத்தோடு கேட்டார்.

அவரது மனைவியோ அமைதியாக ''நேற்றிரவு நான் நம் வீட்டு ஜன்னல் வழியாகப் பார்த்தேன். இங்கே பெரிய யானை ஒன்று வந்து புகுந்து இந்தக் கரும்பை எல்லாம் சாப்பிட்டுச் சக்கையைத் துப்பிக் குவித்துக் கொண்டிருந்தது. முனியன் விநாயக பக்தன். அவர் அவனைக் கைவிடவில்லை. எல்லாம் சாப்பிட்டு முடித்தபின் அது மாயமாய் மறைந்து போயிற்று. அப்படி வந்தவர் விநாயகராகத்தான் இருக்க வேண்டும்,'' என்றாள்.

பண்ணையாரோ, ''இதென்ன! யானையாவது! வந்து எல்லாம் சாப்பிடுவதாவது! நம்ப முடியவில்லையே. முனியன் அவ்வளவு பெரிய பக்தனா?'' என்று கூறிக் கொண்டிருக்கும்போதே அவரது சில வேலையாட்கள் ஓடி வந்து ''ஐயா! நேற்றிரவு பந்தல் போட்டு இன்று பூஜைக்காக வைக்கப்பட்டிருந்த விநாயக விக்கிரகம் காணவில்லை,'' என்றனர்.

பிறகு அவர்கள் சாளையைப் பார்த்தவாறே ''இதோ! இங்கே இருக்கிறதே!'' என ஆச்சரியத்துடன் கூவினார்கள். (தொடரும்)





# தவம் இதுவே!



ஈஸ்வர சாஸ்திரிக்கு நான்கு மகன்கள் இருந்தனர். அவர்களில் முதல் மூன்று மகன்களும் தம் தந்தையிடமே எல்லா சாஸ்திரங்களையும் கற்று நல்ல புலமை பெற்றனர்.

ஆனால் அவரது கடைசி மகனான கண்ணனோ எதுவும் கற்கவில்லை. காரணம் அவனது மூளையில் எவ்வளவு சொல்லிக் கொடுத்தாலும் ஏறாமல் போனதுதான். தன் மகன் கல்வி அறிவில்லாமல் இருக்கிறானே என்று அவனது தந்தை மிகவும் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தார்.

கண்ணனோ தன் சகோதரர்களுக்குக் கிடைக்கும் மரியாதையும் கௌரவமும் தனக்குக் கிடைப்பதில்லையே என்று வருந்தலானான். தான் படிக்க முயன்றும் எதுவும் தன் மூளைக்கு எட்டவில்லையே என்று எண்ணி அவன் கவலைப்பட்டான்.

அதை உணர்ந்த ஈஸ்வர சாஸ்திரி அவனை ஒரு குருகுலத்தில் சேர்த்தார். ஒரு வருடகாலம் அங்கு அவன் இருந்தபோதிலும் அவனுக்குப் படிப்பு ஏறவில்லை. மாடு மேய்ப்பது, மரம், செடிகளை வளர்ப்பது என்பதில்தான் ஆர்வம் காட்டி வந்தான்.

ஒரு வருடம் கழிந்தது. கண்ணன் குருகுலத்திலிருந்து வீட்டிற்கு வந்துவிட்டான். அப்போது அவனது இரண்டாவது அண்ணனுக்குப் பெண் கொடுக்க ஒருவர் ஈஸ்வர சாஸ்திரியின் வீட்டிற்கு வந்திருந்தார்.

அவர் கண்ணனைப் பார்த்ததும்

- கௌரிநாதன் -



சாஸ்திரியிடம் அவன் யாரென்று கேட்டார். அப்போது கண்ணனின் அண்ணி குறுக்கிட்டு கேலியாக ''இவர்தான் என்னுடைய கடைசி மைத்துனர். வால்மீகி முனிவருக்குச் சமமானவர்,'' என்று கூறினாள்.

அதுகேட்டு கண்ணன் தலை குனிந்து கொண்டான். ஏனெனில் வால்மீகி முனிவர் அறிவுபெற்று ராமாயணத்தை இயற்றுமுன் கல்வி அறிவில்லாத வேடனாகத் திரிந்து கொண்டிருந்தார். அதுபோல இருப்பதாகத் தன் அண்ணி வேண்டுமென்றே கூறினாள் என்பதைப் புரிந்து கொண்டு கண்ணன் வேதனைப் பட்டான். உடனே அங்கிருந்து எழுந்து வீட்டைவிட்டு வெளியேறி அவன் கால்போன போக்கில் போய்க் கொண்டிருந்தான்.

வேடன் கடுந்தவம் புரிந்து பிறகு தானே வால்மீகி முனிவராகி மாபெரும் இலக்கியகர்த்தா எனப் புகழ் பெற்றார்? எனவே தானும் தவம் செய்து வால்மீகி முனிவரைப் போல அறிவு பெற்றுவிட வேண்டும் என்று அவன் எண்ணினான்.

இவ்வாறு எண்ணியவாறே சென்ற அவன் மாலைப் பொழுதானபோது ஒரு முனிவரின் ஆசிரமத்தை அடைந்தான். அங்கு முனிவர் கண்களை மூடிக் கொண்டு தியானத்தில் அமர்ந்திருந்தார். அதுகண்டு கண்ணனும் சற்று தூரத்தில் உட்கார்ந்து கண்களை மூடிக் கொண்டான்.

அவன் கண்களை மூடி அமர்ந்த போதிலும் தியானம் செய்ய முடியவில்லை. மனம் பலவிதத்தில் அலைந்து கொண்டிருந்தது. இப்படியே பல மணிநேரம் கழிந்தபின் முனிவர் தியானம் கலைந்து எழுந்து ஆசிரமத்தில் அங்குமிங்குமாக நடக்கலானார்.

அப்போது கண்ணன் எழுந்து அவரருகே சென்று அவரது கால்களில் விழுந்து வணங்கி ''சுவாமி! கல்வி அறிவற்ற என்னை எல்லோரும் தாழ்வாகப் பார்க்கிறார்கள். அதனால் எனக்கு வாழ்க்கையின் மீதே வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. எனவே, சன்னியாசியாகி தவம் செய்து பகவானின் அருள் பெற்று மோட்சம் அடைய விரும்புகிறேன். அதற்காகத் தங்கள் சீடனாக விரும்புகிறேன்,'' என்றான்.

முனிவர் அவன் சொன்னதைக் கேட்டுவிட்டு ''அப்பனே! வாழ்வில்

பிரம்மசரியம், கிருஹஸ்தாசிரமம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்ற நிலைகளை வரிசையாக அடைய வேண்டும். நீ இப்போது பிரம்மசரிய நிலையைக் கடந்துவிட்டாய். கிருஹஸ்தாசிரமத்தில் நுழைந்து அதன்பிறகே தவம் புரிய வானப் பிரஸ்த நிலைக்கு வரவேண்டும். எனவே இந்த முறைப்படி நீ கிருஹஸ்தனாகிவிட்டுப் பிறகு காட்டிற்கு வந்து தவம் செய்!'' என்றார்.

கண்ணன் இதனால் திருப்தி அடையவில்லை. அதைக் கண்டு முனிவர் ''நான் காலையில் ஆற்றில் குளித்துவிட்டு வருவேன். அப்போது பேசலாம்,'' என்றார். கண்ணனும் காலை வரை காத்திருந்து முனிவர் குளித்துவிட்டு வந்ததும் அவரை வணங்கினான்.

அவரும் புன்னகை புரிந்தவாறே ''அப்பனே! உனக்கு கிரஹஸ்தாசிர மத்தை ஏற்க விருப்பம் இல்லை என்பது தெரிகிறது. அதனால் சிறிது காலம் நீ உடல் உழைப்பைக் கொண்டு செயல்படு. இதற்காவது உனக்கு விருப்பம் உள்ளதா?'' என்று கேட்டார்.

கண்ணன் அவர் கூறியதை ஏற் பதாகச் சொன்னான். முனிவரும் ''அப்படியானால் என்னுடன் வா!'' என்று கூறி சற்று தூரத்திலுள்ள ஓர் ஊருக்கு அழைத்துச் சென்றார். அங்கே ஒரு மாடி வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்த ஒருவர் எழுந்து முனிவரை வணங்கினார்.



முனிவரும் ''சோமநாதா! நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். இந்த இளைஞன் கண்ணன். உன் வயல்களில் ஓர் ஏக்கர் நிலத்தை ஒரு வருட காலத்திற்கு இவனுக்குக் கொடு. இவனை அதில் உழைக்கச் செய்வது உன் பொறுப்பு. இவன் தன் உழைப்பால் இந்த நிலத்தில் விளைவித்ததை விற்றுப் பயன் படுத்துவதும் உன் பொறுப்பு,'' என்றார்.

சோமநாதனும் மகிழ்ச்சியுடன் அந்தப் பொறுப்பை ஏற்பதாகக் கூறினார். முனிவரும் கண்ணனிடம் சோமநாதன் கொடுக்கும் வயலில் ஒரு வருடம் உழைக்கும்படிக் கூறிவிட்டுச் சென்றார்.

ஒரு வருடம் கழிந்தது. முனிவர் கண்ணனைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கையில் அவனே ஒரு

கூடை நிறையப் பலவிதப் பழங்களைக் கொண்டு வந்து அவர்முன் வைத்து வணங்கி நின்றான். முந்தைய சோகமோ வருத்தமோ அவனிடம் இருக்கவில்லை. சிரித்த முகமாய்க் காணப்பட்டான்.

முனிவரும் புன்னகை புரிந்து ''என்ன கண்ணா, இப்போது வாழ்வின் மீது உனக்கு வெறுப்பு ஏற்படவில்லையே! ஏதாவது மாறுதல் கண்டாயா?'' என்று கேட்டார். அவனும் ''குருவே! பெருத்த மாறுதலையே கண்டேன். இவ்வூர் கோயில் அர்ச்சகர் தம் மகளை எனக்குத் திருமணம் செய்து வைக்க முன்வந்திருக்கிறார்,'' என்றான்.

முனிவரும் ''அப்படியானால் நீ கிரஹஸ்தாசிரமத்தை ஏற்கப் போகிறாய்? என்ன, நான் சொல்வது சரி தானே?'' என்று கேட்டார். அவனும் ''தங்கள் ஆசீர்வாதத்தால் நான் கிருஹஸ்தனாக விரும்புகிறேன்,'' என்றான் சற்று நாணிக்கோணிக் கொண்டே.

முனிவரும் ''உன்னிடம் இந்த மாறுதல் ஏற்பட்டது கண்டு மகிழ்கிறேன். அதற்காகத் தான் உன்னை சோமநாதனிடம் ஒப்படைத்தேன். மனிதன் வாழ ஒரு குறிக்கோள் இருக்க வேண்டும். இதற்குக் கல்வி தான் வேண்டும் என்பது இல்லை. எல்லோரும் ஒரே விதமாக இருப்பதில்லை. விருப்பு, வெறுப்புகள் மாறுபட்டே இருக்கும். உடலால் உழைப்பதும் ஒரு வகைத் தவமே. நீ படிப்பைவிட உடல் உழைப்பில் விருப்பம் கொண்டுள்ளதை நீ குருகுலத்தில் இருக்கையில் நான் கவனித்தேன். எனவே உன்னை விவசாயத்தில் ஈடுபடுத்தினேன். உன் தாய், தந்தையர் உன் விருப்பத்தை அறிந்து செயல் பட்டிருந்தால் நீ சன்னியாசியாகித் தவம் செய்ய நினைத்திருக்கவே மாட்டாய். வாழ்க்கை மீது சிலர் வெறுப்படைய அவர்களது பெற்றோர்களே பெரும்பாலும் காரணமாக இருக்கிறார்கள்,'' என்றார்.

கண்ணன் ''சுவாமி! நீங்கள் எனக்குக் கூறியதையே எல்லோரிடமும் சொல்வேன்,'' என்று கூறி வணங்கி விடைபெற்றுக் கொண்டு சென்றான்.





# கதையால் மனநிம்மதி!

மலையூரில் மாதவய்யா என்ற கிழவர் இருந்தார். அவர் விதவித மான கதைகள் சொல்ல எல்லோர் மனதையும் களிப்பிப்பவர். ஒரு தடவை சொன்ன கதையை மறு படியும் சொல்வது இல்லை. அத னால் புதுப்புது கதைகளாக இருந்த தால் எல்லோரும் அவற்றை ஆவ லுடன் கேட்டு வந்தார்கள். குழந்தை கள் முதல் கிழவர்கள் வரை அவரை எப்போதும் சூழ்ந்து இருப்பார்கள்.

மலையூர் சிவசமுத்திரம் ஜமீனில் உள்ளது. அதன் ஜமீன்தாரர் மார்க்க பூபதி. அவர் திடீரென நோய்வாய்ப் பட்டு படுத்தபடுக்கையாகக் கிடந் தார். எங்கெங்கோ எல்லாம் இருந்து அவருக்கு வைத்தியம் செய்யப் பெரியபெரிய வைத்தியர்கள் எல் லாம் வந்தார்கள். பலவித மருந்து களைக் கொடுத்தார்கள். ஆனால் ஜமீன்தாரரின் நோய் குணமாகவே இல்லை. வந்த வைத்தியர்கள் அது உடல் சம்பந்தப்பட்ட நோய் அல்ல என்றும் மனோ வியாதி என்றும் கூறி ஜமீன்தாரர் மனநிம்மதி பெற்றால் நோய் போய்விடும் என்று கூறி விட்டுச் சென்றார்கள்.

மனம் நிம்மதி பெற என்ன செய் யலாம் என்று ஜமீன்தாரர் யோசித் தார். இனிமையான இசையைக் கேட்டார். மனநிம்மதி ஏற்பட வில்லை. புராண கதாகாலட்சேபங் களைக் கேட்டார். அப்போதும் மன நிம்மதி ஏற்படவில்லை. இராமா யணம், மகாபாரதம், பாகவதம் போன்ற நூல்களைப் படித்தும் அவருக்கு நிம்மதி கிடைக்கவில்லை.

அப்போது ஜமீன்தாரரிடம் கதை கள் கூறும் மாதவய்யாவைப் பற்றிக் கூறினார்கள். ஜமீன்தாரரும் உடனே

- எஸ். சங்கர்ராம் -



மலையூருக்கு தன் ஆளை அனுப்பி மாதவய்யாவைக் கூட்டிக் கொண்டு வரச் சொன்னார். மாதவய்யாவும் வந்து ஜமீன்தாரரிடம் பேசி விஷயத்தைத் தெரிந்து கொண்டார். அவர் ஜமீன்தாரரின் மாளிகையிலேயே தங்கி ஒரு வாரம் அவருக்குக் கதைகளைச் சொன்னார். அவற்றைக் கேட்டு ஜமீன்தாரரின் மனம் மகிழ்ந்தது. அவர் நிம்மதியும் அடைந்தார்.

மாதவய்யா கதை சொல்லும் முறை ஜமீன்தாரருக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. அவரது மனம் மகிழ்ந்து நிம்மதியை அடைந்ததால் அவரது தேக ஆரோக்கியமும் சீர் அடைந்தது.

அப்போது அவர் மாதவய்யாவிடம் ''உங்களுக்கோ வயதாகி விட்டது. தனியாகத் தானே இருக்கிறீர்கள். அதனால் நீங்கள் உங்கள் ஊருக்குப் போக வேண்டாம். என் மாளிகையிலேயே இருந்து எனக்கு தினமும் கதை சொல்லி வாருங்கள்,'' என்றார்.

மாதவய்யாவும் அவர் கூறியதை ஏற்று அவரது மாளிகையிலேயே தங்கிவிட்டார். அவருக்கு எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. அவரும் சுகமாக வாழலானார்.

மலையூர் மக்கள் மாதவய்யா ஜமீன்தாரரின் மாளிகைக்குச் சென்றுவிட்டதால் அவரது கதைகளைக் கேட்க முடியாது போயினர். ஊர் பிரமுகர்களில் சிலர் சிவசமுத்திரத்திற்கு வந்து ஜமீன்தாரரைக் கண்டு மாதவய்யாவை தங்கள் ஊரான மலையூருக்கு அனுப்பி விடும்படி வேண்டினார்கள். தம் ஊரில் யாவரும் அவரது கதைகளைக் கேட்கத் தவிப்பதாயும், இவ்வளவு நாட்களாக

அவரது கதைகளைக் கேட்காததால் தம் மன நிம்மதியே போய்விட்ட தாயும் கூறினார்கள்.

ஆனால் ஜமீன்தாரரோ மாதவய்யா வால் தனக்கு மன நிம்மதி ஏற்பட்டு உடல்நிலையில் முன்னேற்றம் ஏற் பட்டிருப்பதால் அவரை மலை யூருக்கு அனுப்பமுடியாதென்று கூறி அவர்களை அனுப்பிவிட்டார்.

இப்படியே இரண்டு மாதங்கள் கழிந்தன. மாதவய்யாவின் மனமும் தன் ஊராரைப் பற்றி எண்ணிக் கவலைப்படலாயிற்று. அங்கு குழந் தைகள் முதல் கிழவர்கள் வரை அவரது கதைகளைக் கேட்டு மகிழ்ந் தார்கள். இங்கோ ஜமீன்தாரருக்கு நேரம் கிடைக்கும்போது தான் கதை சொல்ல வேண்டி இருக்கிறது. இதை நினைத்து தம் ரசிகர்களைத் திருப்திப் படுத்த முடியவில்லையே என்று அவர் கவலைப்படலானார். அத னால் அவர் கதை சொல்வதில் தொய்வு ஏற்பட்டது.

இதைக் கவனித்த ஜமீன்தாரர் ''என்ன மாதவய்யா! உங்களுக்கு ஊர் ஞாபகம் வந்துவிட்டதா?'' என்று கேட்டார். மாதவய்யாவும் ''ஆமாம். அங்கு உள்ளவர்களை விட்டுப் பிரிந்து அவர்களுக்குக் கதைகளைச் சொல்லி மகிழ்விக்க முடியாமல் இருக்கிறேனே என்று தான் கவலைப் படுகிறேன்,'' என்றார்.

ஜமீன்தாரரும் ''கவலை வேண் டாம். நீங்கள் இவ்வளவு நாட்களாக எனக்குக் கதைகளைச் சொல்லி மகிழ்வித்து மன நிம்மதியைக் கொடுத்ததோடு என் மனநோயை யையும் போக்கடித்துவிட்டீர்கள். இனி நீங்கள் உங்கள் ஊருக்குப்போய் அங்குள்ளவர்களுக்குக் கதைகள் சொல்லி அவர்களுக்கும் மன நிம்மதி யைக் கொடுத்து நீங்களும் மன நிம்மதியைப் பெறுங்கள்,'' என்றார்.

அவர் கூறியதைக் கேட்ட மாத வய்யா மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். உடனே அவர் ஜமீன்தாரரிடம் விடை பெற்றுக் கொண்டு மலையூருக்குப் புறப்பட்டார்.



# நீர் சேகரிப்பு!

மனிதனுக்கு மிகமிகத் தேவையானது நீரே. தண்ணீர் இல்லாமல் பூமியில் வாழ முடியாது. இப்படி மிக மதிப்புள்ள நீரை யாருமே எச்சரிக்கையுடன் ஜாக்கிரதையாகப் பயன்படுத்துவதே இல்லை. அலட்சியமாய் மனம் போன போக்கில் அதை வீணாக்குகிறார்கள். கி.பி. 2025ல் நீர் தற்போது கிடைப்பதில் 50 சதவீதம் குறைந்துவிடப் போகிறது. இதனால் நாம் நமது நீர்த் தேவையை அதிகரித்துக் கொள்ள முடியாது என்பதைத் தெரிந்து கொள்வதோடு கிடைக்கக் கூடிய நீரை சில தகவல்களையும் அதைச் சிக்கனமாகப் பயன்படுத்தும் வழிகளையும் கூறுகிறோம்.

## நீர் - சில உண்மைகள்

 பூமியில் கிடைக்கும் நீரில் மிகச் சுத்தமான நீர் 2 சதவீதத்திற்கும் குறைவே.

 ஒவ்வொரு முறையிலும் கழிப் பறையில் 10 முதல் 30 லிட்டர் வரை சுத்தமான நீர் பயன் படுத்தப்படுகிறது.

 ஒவ்வொரு மனிதனும் தினமும் குறைந்தது 10 கோப்பைத் தண்ணீர் பருகுகிறான்.

 நம் வீட்டில் குளிப்பதற்காகப் பயன்படுத்தப் படும் 'ஷவர்' மூலம் நிறைய தண்ணீர் செலவாகிறது. அதில் பத்து நிமிடம் குளித்தால் 180 முதல் 250 லிட்டர் வரை நீர் செலவாகிறது.



நான்கு பேர் அடங்கிய ஒரு குடும்பம் 50 லிட்டர் நீரில் தங்களுடைய அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முடியும் என்று வல்லுநர்கள் கருதுகிறார்கள்.

மாசுற்ற ஒரு லிட்டர் நீர் எட்டு லிட்டர் நீரை மாசுற்றதாக ஆக்கி விடுகிறது.

ஒழுகும் குழாயை அப்படியே விட்டுவிட்டால் தினமும் 380 லிட்டர் நீர் வரை வீணாகும்.



# நீரை வீணாக்காமல் சேமிப்பது எப்படி?

★ நம்மில் பலர் பல் தேய்க்கும் முன்பே தண்ணீர்க் குழாயைத் திறந்துவிட்டு, பிறகே பிரஷ், பேஸ்ட் முதலியவற்றை எடுத்து வருகிறார்கள். அதுவரை குழாயில் இருந்து நீர் வெளி வந்து வீணாகிக் கொண்டிருக்கிறது. இப்படி நீர் வீணாவதைத் தடுக்க ஒரு மக்கில் தண்ணீர் பிடித்துக் கொண்டு குழாயை மூடிவிடலாம்.

★ குழாய் கெட்டு அதிலிருந்து நீர் சொட்டுசொட்டாக வெளிவந்து நாள் ஒன்றுக்கு 35 லிட்டர் வீதம் வீணாகிறது. இதற்கு தேய்ந்துபோன வாஷரோ, வால்வோ காரணமாக இருக்கலாம். இவற்றை அவ்வப்போது மாற்ற வேண்டும்.



துணிகள் நிறைந்து இருந்தாலே வாஷிங் மெஷினை உபயோகப்படுத்த வேண்டும்.

உங்கள் காரை அலம்ப ஹோஸ் பைப்பிற்குப் பதில் பக்கெட் நீர் உபயோகியுங்கள்.



★ ★ ★ ★ ★

சில கிராமங்களில் உள்ளவர்கள் குடிநீர் எடுத்துவர 10 கி.மீ. தூரம் வரை கூட நடக்க வேண்டியுள்ளது. பூமியில் நீர்மட்டம் குறைவதே இதன் காரணமாம்.

நீர் பரிசோதனை, நீரை வீணாக்காமல் தடுப்பது, நீர்த்தேவைகளை கவனிப்பது போன்ற மக்கள் கடைப்பிடிக்க வேண்டியவைகளில் அரசாங்கம் சட்டம், பொருளுதவி போன்றவைகளைச் செய்து கூட்டுமுறையில் ஒத்துழைப்பைப் பெற வேண்டும். இதற்கான திட்டங்களை வகுத்துச் செயல்படுத்த வேண்டும்.

தினமும் நீரை வீணாக்காமல் ஒருவேலையையாவது செய்யுங்கள். நம்மால் மேலும் சிக்கனமாக நீரை செலவு செய்ய முடியவில்லையே என்று கவலைப்படாதீர்கள். ஒவ்வொருவரும் கொஞ்சம் சிக்கனம் செய்தாலே பெருத்த மாறுதலைக் கொண்டு வர முடியும். இதுபற்றி நாம் தான் நம் பெற்றோர், உற்றார், உறவினர், நண்பர்கள் ஆகியோருக்கு கவனமாக உபயோகிக்கும் வழிமுறைகளை எடுத்துக் கூற வேண்டும்.



சதியை அறிந்த மன்னன் சாந்தி தேவன் தன் மனைவியைக் கைக் குழந்தையுடன் சுரங்கம் வழியாகத் தப்பிவிடக் கூறினான். சேனாதிபதியும் அவனது ஆட்களும் கொல்ல வர, அவர்களை எதிர்த்தவாறே மன்னன் அரண்மனையின் மேல்தளத்தை அடைந்தான்.

# சூர்யா

**வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்**






Art : Gandhi Ayya

ஏணியில் ஏறிவரும் வீரர்களைக் கண்டு மன்னன் ஏணியைக் காலால் உதைக்கவே ஏணியோடு அந்த வீரர்கள் கீழே விழுந்தனர்.












மன்னன் அரண்மனை மேல் தளத்திலிருந்து கீழே குதித்து...
வீரசிம்மனின் வீரர்களின் கைகளில் இருந்த வாள்களையும் ஈட்டிகளையும் விழச் செய்தான்.






ஓடிக் கொண்டிருக்கும் நதியை ஒட்டியுள்ள சுவரை அடைந்து....
நதியில் குதித்தான்.


நீரோட்டத்தில் மூழ்கிப் போய் விட்டான்.




இதே சமயம் ராணி ஒரு மெழுகுவத்தி வெளிச்சத்தில் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு ரகசிய சுரங்கப் பாதையில் அடி மேல் அடி வைத்துச் சென்று கொண்டிருந்தாள்.







சுரங்கப் பாதையின் சுவர்கள் ஈரமாக இருந்தன. காற்றே இல்லை. தரையில் கிடந்த ஒரு கல் தடுக்கவே, தவறி ராணி விழுவதற்கு இருந்தாள். ஆனால் சமாளித்தாள். கையிலிருந்த மெழுகுவத்தி விழுந்து அணைந்தது.







குகையின் சுவரில் பெயர்ந்துள்ள கற்களின் இடையே உள்ள சந்துகள் வழியாக வெளிச்சம் உள்ளே வந்தது. மேலும் வெளிச்சம் பெறுவதற்காக ராணி சில கற்களைப் பெயர்த்தாள்.

அவள் அங்கு கற்பலகை ஒன்றைக் கண்டாள். குழந்தையை தரையில் படுக்க வைத்து, அப்பலகையை அங்கும்இங்குமாக நகர்த்தினாள்.

அங்கு ஒரு வழி தென்படவே, மகிழ்ந்து போனாள். வெளியே வந்த பின் அதை அந்த இடத்திலேயே பொருத்தினாள். பிறகு குழந்தையை எடுக்கத் திரும்பியபோது அது அங்கே இருக்கவில்லை.

துயரத்தால் தன் நினைவை இழந்து விழுந்துவிட்டாள்.









## கேளிக்கை நேரம்

இது கானகத்தின் அழகான காட்சி. இதில் சில வேடிக்கையானவற்றைக் காணலாம். அவற்றை எழுதி விட்டுப் பாருங்கள்!

### 1. வண்ணம் தீட்டுங்கள்!

திருவாளர் தவளையார் காற்று வாங்கப் போகிறார். இப்படத்திற்கு ஏற்ற வண்ணங்களைத் தீட்டுங்கள்!

### 2. லிண்டாவுக்கு உதவுங்கள்!

லிண்டா தன் சகோதரி மரப்பொந்தில் அகப்பட்டது கண்டு அங்கு போகத் தவிக்கிறது. நீங்கள் அதற்கு இடையிலுள்ள பூச்சியைத் தவிர்த்து வழி காட்டுங்கள்!




3. அந்த இலை எது?
வெட்டுக்கிளி பல இலைகளைக்
கடித்துவிட்டது. ஓர் இலையில்
மட்டும் ஒரு மாதிரியாகக்
கடித்துள்ளது. அந்த இலை எது?
4
b
a
4. ஓடி
ஒளிந்தது
ஒரு பூச்சி
ஒரு மலரில்
ஒளிந்துள்ளது.அதைக்
கண்டுபிடித்துக்
கூறுங்கள்!
A
3
B
C
D
(விடைகள்
66ம் பக்கத்தில்)
2

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**





வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-
போட்டி முடிவு டிசம்பர் 2003 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

ஆகஸ்ட் 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

**பா. முருகேசன்**
C/o. எம். பாலுசாமி
எண்.2, தியாகராஜர் காலனி,
பசுமலை, மதுரை – 625 004.

பரிசு பெற்றவை





**பிச்சை எடுப்பதை நிறுத்திக் கொள்!**
**சுயதொழில் செய்து பிழைத்துக் கொள்!**

கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)

**3. அந்த இலை எது?**
D என்ற இலை.

**4. ஓடி ஒளிவது**
6 மலரில் பூச்சி ஒளிந்துள்ளது.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

